# ஆஸ்திரேலியாவில் சில நாட்கள்

சு. இராமசுவாமி நாயுடு,
முன்னாள் மேயர், சென்னை.

வெள்ளையன் பதிப்புக் கழகம்
கண்டனூர் :: இராமநாதபுரம் மாவட்டம்

முதற் பதிப்பு—நவம்பர், 1954
இரண்டாம் பதிப்பு—ஜூன், 1955
மூன்றாம் பதிப்பு—ஜூன், 1957

APPROVED FOR CLASS USE—NON-DETAILED STUDY
BY THE MADRAS TEXT-BOOK COMMITTEE
[Fort St. George Gazette, dated 4—5—1955,
Supplement to Part I-B, Page 28]



விலை ரூ. 1

The Royal Printing Works, Madras-2.

# முகவுரை

எனது ஜப்பான் செலவிற்குப் பின்பு நண்பர் பலரின் வற்புறுத்துதலால், யான் எழுதி வெளியிட்ட ''நான் கண்ட ஜப்பான்'', ''ஜப்பானில் சில நாட்கள்'' என்னும் நூல்கள் தமிழகத்து நன்மக்களால் நன்கு வரவேற்கப்பட்டன. அண்ணுமலை, சென்னை, மைசூர், திருவனந்தபுரம் பல்கலைக் கழகத் தமிழ்ப்பாடக் குழுவினர் 'நான் கண்ட ஜப்பான்' என்னும் நூலைத் தத்தம் பல்கலைக் கழகங்களிற் பாடமாக வைத்து என்னை ஊக்கினர். நூற்றுக் கணக்கான உயர்நிலைப் பள்ளிகட்கு உரியவர்கள், 'ஜப்பானில் சில நாட்கள்' என்னும் நூலைத் தத்தம் பள்ளிகளிற் பாடமாக்கி உதவினர். அப்பெருமக்கள் எல்லோர்க்கும் என் நன்றி என்றும் உரியது.

சென்ற ஆண்டு யான் பிலிப்பைன்ஸ், ஆஸ்திரேலியா, நியூஜீலந்து முதலிய கிழக்கு நாடுகளுக்குச் சென்று மீண்டதை அறிந்த என் நண்பர் பலர், அந்நாடுகளைப் பற்றிய விவரங்களை முன் போலவே நூல்களாக எழுதி வெளியிடல் வேண்டும் என்று பணித்தனர். அவர்தம் பணியை ஏற்று, எனக்கு அவ்வப்போது ஏற்பட்ட ஓய்வு நேரங்களில் இந்நூலினை எழுதத் தொடங்கிப் பல திங்கள் சென்ற பின் ஒருவாறு முடித்தேன்.

இந்நூல் முழுவதும் ஆஸ்திரேலியாவைப் பற்றியது. ஆதலால் இது ''ஆஸ்திரேலியாவில் சில நாட்கள்'' என்னும் பெயர் பெற்றது. ஆஸ்திரேலிய அரசாங்கத்தைச் சேர்ந்த பலதுறை அதிகாரிகள், பல்கலைக் கழகத் துணைவேந்தர்கள், வணிகப் பெருமக்கள், சிட்னிப் பல்கலைக் கழகப் பேராசிரியர்கள் முதலிய பெருமக்கள் ஆஸ்திரேலியாவைப் பற்றிக் கூறிய பலதிறச் செய்திகளும் இதன்கண் இடம் பெற்றுள்ளன. அப்பெருமக்கள் அனைவர்க்கும் என் உளமார்ந்த நன்றி உரியது.

முன்னர் என்னை இந்நூல் வெளியீட்டுத் துறையில் ஆதரித்து ஊக்கி உதவிய பெருமக்கள் அனைவரும் இப்பொழுதும் ஆதரிப்பர் என்னும் துணிவுடன் இந்நூலை வெளியிடுகின்றேன். தமிழன்னை திருவருள் புரிக.

தியாகராயநகர், 15—9—1954

சு. இராமசுவாமி நாயுடு

# உள்ளுறை

# 1. புதிய கண்டம்

## வான் வழிச் செலவு

ஆசிய நாடுகளுள் தொழில், வாணிகம், இயந்திரப் பெருக்கம் முதலிய பல துறைகளிலும் முன்னேறி இருப்பது ஜப்பான் என்பதை அனைவரும் அறிவர். அங்குள்ள மக்கள் உழைப்பின் உறைவிடமாக விளங்குகின்றனர். நான் அத்திரு நாட்டை 1952-இல் பார்வையிட்டு மகிழ்ந்தேன்; அடுத்த ஆண்டு இங்கிலாந்து, பிரான்ஸ், ஜெர்மனி, இத்தாலி, எகிப்து முதலிய மேற்கு நாடுகளைக் கண்டு மீண்டேன்; இந்த (1954-ஆம்) ஆண்டின் தொடக்கத்தில் கீழை நாடுகளைப் பார்க்க விரும்பினேன். நான் வான் வழிச் சென்று முதலில் இலங்கையைக் கண்டேன்; பின்பு பிரிட்டனின் சிறந்த கடற்படைத் தளமாக உள்ள சிங்கப்பூரை அடைந்தேன்; அங்கிருந்து சீனத்திலுள்ள ஹாங்காங்கு நகரத்திற்குச் சென்றேன்; பின்னர் ஜப்பான் நாட்டுக் கோநகரமான டோக்கியோவைக்கண்டு களிப்புற்றேன்; அவ்வளமிகு நகரத்திலிருந்து பிலிப்பைன்ஸ் தீவுகளுக்குச் சென்று தங்கினேன்; சில நாட்களுக்குப் பின்னர், 'பழைய உலகத்தின் புதிய கண்டம்' எனப்படும் ஆஸ்திரேலியாவைக் காண அவாக் கொண்டேன்; அதனால் வானவூர்தியில் அமர்ந்து, மேற்கு ஆஸ்திரேலியாவின் வடகோடியிலுள்ள டார்வின் நகரத்திற்குச் சென்றேன்.

**ஆஸ்திரேலியாவில்**

நான் **டார்வின்** நகரத்தைச் சுற்றிப் பார்வை யிட்டேன்; பின்னர் ஆஸ்திரேலியாவின் கிழக்குக் கரையில் உள்ளதும் சிறந்த துறைமுக நகரமாக விளங்குவதுமாகிய **சிட்னி**யை அடைந்தேன். அது புதிய தென்வேல்ஸ் மாகாணத்தின் தலைநகர மாகும். அங்கிருந்த அரசாங்க அதிகாரிகளுடனும், வணிகப் பெருமக்களுடனும், பல்கலைக் கழகப் பேராசிரியர்களுடனும் சில நாட்களைக் கழித்தேன். சிட்னி நகரம் 'ஆஸ்திரேலியா' என்னும் மனித னது 'உயிர்' என்று கூறலாம். எல்லா நலங்களும் பெற்றுள்ள அப்பெரு நகரைப் பார்வையிட்ட பின்னர், யான் ஆஸ்திரேலியா நடு அரசாங்கத்தின் (Commonwealth of Australia) தலைநகரான **கான்பரா**வைக் கண்டு களித்தேன்; பின்பு விக் டோரியா மாகாணத்தின் தலைநகரான மெல்பர்ன் நகரத்தை அடைந்தேன். அப்பெரு நகரம் இயற்கை அழகையும், செயற்கை அழகையும் தன் பால் கொண்டு விளங்குவது. அங்குள்ள பல துறைப் பெருமக்களோடு சில நாட்களைக் கழித்த பின்னர், யான் குவீன்ஸ்லாந்து மாகாணத்தின் தலைநகரான **பிரிஸ்பேன்** (Brisbane) நகரத்திற்குச் சென்றேன். அதுவும் முன்னவை போலவே கண் ணுக்கினிய காட்சியை நல்கும் கவினுறு நகர மாகும். அங்குள்ள நண்பர்களுடன் இரண்டு நாட்கள் அளவளாவிய பின்னர், யான் தென் ஆஸ் திரேலிய மாகாணத்தின் தலைநகரமான **அடி லெய்ட்** என்னும் பெருநகரத்திற்குச் சென்றேன்.

இயற்கையும் செயற்கையும் இணைந்து நின்று அந் நகரத்தை அழகு செய்கின்றன. வானளாவிய கட்டடங்கள் என்னை வரவேற்பன போலக் காட்சி யளித்தன. அத்திரு நகரின் அமைப்பையும் அழகையும் செல்வச் சிறப்பையும் கண்டு களித்த யான், அங்கிருந்து **டாஸ்மேனியா** (Tasmania) என்னும் மாகாணத்தை அடைந்தேன். டாஸ் மேனியா ஆஸ்திரேலியாவிற்குத் தெற்கே உள்ள ஒரு தீவாகும். ஆயின், அஃது ஆஸ்திரேலிய அரசாங்கத்திற்கு உட்பட்ட ஒரு மாகாணமாக இருக்கின்றது. நான் மூன்றுநாட்கள் அங்குத் தங்கினேன்; அங்குள்ள தொழிற்சாலைகளைப் பார் வையிட்டேன்; பின்பு மேற்கு ஆஸ்திரேலிய மாகாணத்தின் தலைநகரான **பெர்த்** (Perth) என்னும் பேரூரை அடைந்தேன். அங்குள்ள அரசாங்க உயர் அலுவலர் என்னை மகிழ்ச்சியோடு வரவேற் றனர்; நகரத்தின் பல பகுதிகளையும் எனக்குக் காட்டினர்.

**கண்டனவும் கேட்டனவும்**

நான் இப்புதிய கண்டத்தில் இருபத்தைந்து நாட்கள் இருந்தேன்; ஒவ்வொரு மாகாணத் தலை நகரையும் நன்கு பார்வையிட்டேன்; அவரவர் துறை பற்றிய செய்திகளைப் பலதுறை உயர் அலு வலர் கூறக் கேட்டறிந்தேன்; பல தொழிற்சாலை களையும் பார்வையிட்டேன். நான் கண்ட ஒவ் வொரு நகரத்திலும் இருந்த நல்லறிஞர் தமது நாட்டைப் பற்றிக் கூறிய செய்திகள் பலவாகும். அவற்றுள் சிலவே இந்நூலிற் கூறப்பட்டுள்ளன.

அவர்கள் தெரிவித்த எல்லா விவரங்களும் பிறி தொரு நூலில் இடம் பெற்றுள்ளன.*

**புதிய கண்டம்**

புதிய கண்டமாகிய ஆஸ்திரேலியா பசிபிக் பெருங்கடலில் இருப்பது. இப்பெரு நிலப்பரப் பைக் கண்டறியப் பிரெஞ்சுக்காரரும், டச்சுக்கார ரும் கி. பி. 16-ஆம் நூற்றுண்டில் முயற்சி செய்த னர். கி. பி. 17-ஆம் நூற்றுண்டில் டச்சுக்காரர் ஆஸ்திரேலியாவின் ஒரு பகுதியைக் கண்டனர்; தங்கள் கொடியை அப்பகுதியில் நாட்டினர். ஆயினும் அவர்கள் அங்குக் குடியேறவில்லை. 18-ஆம் நூற்றுண்டின் இடைப் பகுதியில் **ஜேம்ஸ் குக்** என்னும் ஆங்கிலேயர் அரும்பாடுபட்டுச் சென்று ஆஸ்திரேலியாவின் வடக்கிலுள்ள தீவுகளைக் கண் டார்; பின்னர்த் தெற்கே நெடுந் தொலைவு சென்று நியூஜீலந்து தீவுகளைக் கண்டறிந்தார்; பின்பு பல நாள் முயன்று ஆஸ்திரேலியாவின் கிழக்குக் கரை முழுவதையும், அக்கரைக்கு அண் மையிலுள்ள தீவுகளையும் கண்டறிந்தார். அவரு டைய பெரு முயற்சியின் பயனுகக் கி. பி. 1788-ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 'பாட்டனி பே' என்னும் இடத்தில் ஆங்கிலேயர் குடியேறி னர். அன்று முதல் ஆஸ்திரேலிய வரலாறு தொடக்கம் பெறுகிறது. இனி, இப்புதிய கண்டத் தின் இயற்கையமைப்பைப் பற்றிய சில விவரங் களைக் காண்போம்.

---

*'நான் கண்ட ஆஸ்திரேலியா' என்னும் பெரு நூல்.

# 2. இயற்கை அமைப்பு

**உலகப் படத்தில் ஆஸ்திரேலியா**

உலகப் படத்தில் மிகச் சிறிய கண்டம் ஆஸ்திரேலியாவே. இக்கண்டம் நாற்புறமும் கடல் சூழ்ந்த தீவாகக் காட்சியளிக்கிறது. ஒவ்வொரு நாட்டுக்கும் அதன் பூகோள அமைப்பின்படியே தட்ப வெப்பம் அமையும். தட்ப வெப்ப நிலைக்கு ஏற்ப மக்கள் வாழ்க்கை அந்நாட்டில் நிலவும். இதன்படியே நாற்புறமும் கடலால் சூழப்பெற்ற ஆஸ்திரேலியா புதிய இயற்கையின் இயைபும் வாழ்வும் பெற்றுள்ளது என்று கூறுதல் பொருந்தும். ஆசியாவின் தென்கிழக்குப் பரப்பை ஒட்டிய நிலமாக ஆஸ்திரேலியா விளங்குவதால், ஆசியாவிற்குரிய நில இயற்கையும் இதற்கு அமைந்திருக்கிறது. மேலும் பசிபிக் பெருங் கடலோடு இணைந்திருப்பதால், அதற்கேற்பவும் தட்ப வெப்பம் பொருந்தியுள்ளது. இன்னும் ஆஸ்திரேலியாவின் தென்மேற்கே இந்துமாக் கடல் சூழ்ந்துள்ள நிலையும் குறிப்பிடத்தக்கது. இவையன்றி மிகச் சிறப்பாக, ஆஸ்திரேலியா பசிபிக் பெருங்கடலின் ஊடே கனடாவை நோக்கிச் செல்கின்ற கடல் வழியோடு சேர்ந்திருக்கிறது. இதனைக் காணும் போது உலகப் பெரும் பகுதிகளை ஒன்றோடொன்று சேர்க்கும் ஆஸ்திரேலியாவின் சிறப்பை நாம் உணர்கின்றோம்.

**நால்வகை நில அமைப்பு**

ஆஸ்திரேலியாவின் கிழக்குக் கடற்கரையிலிருந்து தொடங்கிச் சிறிது சிறிதாக நாட்டுள் சென்று, நடுப் பகுதியை அடைந்து, முடிவில் மேற்குக் கடற்கரையைச் சேர்ந்தால், அதன் நில அமைப்புத் தெளிவாகப் புலனுகும். ஆஸ்திரேலியா நால்வகை நில அமைப்புக் கொண்டது என்று ஆராய்ச்சியாளர் கூறுவது முற்றும் உண்மையாகும். கிழக்கிலும், தென்கிழக்குக் கடற்கரைப் பகுதியிலும் உள்ள நிலம், இயற்கைச் செழிப்பும் நீர் வளமும் உடையது. இங்கு மக்கள் தொகையும் மிகுந்துள்ளது. இதனை **முதல் வகை நிலப் பகுதி** என்று அழைக்கலாம். அதனை அடுத்துள்ள உள் நாட்டு நிலம் நன்னிலமே என்று கூறத் தக்கது. ஆனல் இங்குப் பெய்யும் மழை போதியதன்று. இதனை **இரண்டாம் வகை நிலப் பகுதி** என்று கூறலாம். இரண்டாம் வகை நிலத்தை அடுத்த உள்நாட்டுப் பகுதி மேற்கு நோக்கிப் பரந்துள்ளது. இது வெப்பம் மிகுந்த புல்வெளியாகும்; மேய்ச்சல் தொழிலுக்கு மிகவும் ஏற்றதாகும். இதனை **மூன்றும் வகை நிலப் பகுதி** என்று பெயரிடலாம். ஆஸ்திரேலியாவின் நடுவிலுள்ள உள்நாட்டு நிலம் பாலையாகக் காட்சியளிக்கிறது. இங்கு மழை மிகக் குறைவேயாகும். இந்நடுப் பகுதி, தென்மேற்குத் திசையை நோக்கிப் பரந்துள்ளது. இதனை **நான்காம் வகை நிலப்பகுதி** என்று கூறலாம். இவ்வாறு ஆஸ்திரேலியாவில் நால்வகை நிலப்

# இயற்கை அமைப்பு




1. செழிப்புள்ள பகுதி
2. மேய்ச்சல் நிலப் பகுதி
3. வெப்பமான புல்வெளி
4. பாலை நிலம்.

பகுதிகள் அமைந்திருக்கின்றன. மேலேயுள்ள ஆஸ்திரேலியாவின் படமொன்று இப்பகுதிகளைக் காட்டும் நில அமைப்பை நன்கு விளக்குவதாகும்.

ஆஸ்திரேலியாவில் பயிர் செய்வதற்கேற்ற மண் பரப்புக்கள் கிழக்குக் கரையோரம் காணப் படுகின்றன. அங்கு மழைத் துளிகள் வீழ்ந்து, பொருத்தமான தட்ப வெப்பம் பொருந்திய மென்மையான மண், பயிர்த் தொழிலுக்குப் பண் பட்டிருக்கிறது. இந்நிலம் நெடுந்தொலைவு அமைந் திருப்பதால், ஆஸ்திரேலியர் இங்குத் தமக்கு வேண்டும் உணவுப் பொருள்களைப் பயிராக்கு கின்றனர். ஆஸ்திரேலியாவின் நடுவிலுள்ள பாலை நிலப் பகுதியில் முட் செடிகளும், காட்டுச் செடி களும் வளர்கின்றன.

**நீர்வளம்**

நிலநூற் புலவர் ஒரு நாட்டு நீர்வளத்தை மூன்று கூறுகளாக வகுத்துக் கூறுவர்: (1) சில ஆறுகள், மழை நீரைப் பெற்றவுடன் தரை மட் டத்தில் பாயாமல், மண்ணின் அடிப்புறத்தே மறைகின்றன. (2) இன்னும் சில ஆறுகள், நீரோட்டத்தை நிலத்தின் வெளிப்புறத்தே தோற்றுவிக்காமல் உட்புறத்தே கசிந்து ஓடுகின் றன. (3) வேறு சில ஆறுகள், வான் பொய்ப்பி னும் தாம் பொய்யாவாய்ப் பெருக்கெடுத்த நீர் வளத்துடன் மலையிலிருந்து கடலை நோக்கிப் பாய்ந்தோடுகின்றன. இத்தகைய மூன்றுவகை ஆறுகளையும் நாம் ஆஸ்திரேலியாவில் காணலாம்.

ஆஸ்திரேலியாவின் தென் மேற்கிலும் தென் கிழக்கிலும் பற்பல ஏரிகள் நீர் நிறைந்து காணப் படுகின்றன. மேற்கு ஆஸ்திரேலியாவில் இருநூற் றுக்கு மேலான ஏரிகள் உள்ளன என்று கணக் கெடுத்துள்ளனர். ஆஸ்திரேலியாவுக்குத் தெற்கே யுள்ள டாஸ்மேனியா என்னும் தீவிலுள்ள பெரிய ஏரி பன்னிரண்டு மைல் தொலைவு உள்ளது; ஜார்ஜ் ஏரி, நீல ஏரி முதலிய பல ஏரிகளும் இங்கு அமைந்திருக்கின்றன.

**இயற்கைச் செல்வங்கள்**

இவ்வாறு நீர்வளம் பொருந்திய ஆஸ்திரேலி யாவில் கிடைக்கும் இயற்கைச் செல்வங்கள் பற் பலவாகும். குறிப்பிடத்தக்க மூலப் பொருள் கிடைக்காவிடினும், உலோகப் பொருள்கள் சில அகப்படுகின்றன. அடிலெய்ட் என்னும் நகரின் வடகிழக்குப் பகுதியில் வெள்ளி, ஈயம், தாமிரம் ஆகிய உலோகப் பழம் பாறைகள் உள்ளன. இந்தியாவில் மைசூரிலுள்ள கோலார் பொன் சுரங்கத்தைப் போல ஆஸ்திரேலியாவில் கால் கோர்லி என்னும் இடத்தில் பொன் வயல்கள் இருக்கின்றன. மேலும் பெண்டிகோ, பல்லா ராட் ஆகிய இடங்களில் கிடைக்கும் களிமண் ணில் பொன் கலந்துள்ளது. இப்பொன் காலப் போக்கில் பொடியாகி அழிந்து வருகின்றது. மேலும் இப்பொன் துகள் ஆற்று வெள்ளத் துடன் அமிழ்ந்து அங்கங்கே ஆற்றுப் படுகை களில் படிந்து வருகின்றது. ஆஸ்திரேலிய மக்கள் மிக எளிதில் பொன் துகளைச் சலித்துப்

பொற்கட்டிகளாகச் செய்து கொள்ளுகின்றனர். பொன்னுடைய போர்த்தாற் போன்ற ஆற்றுப் படுகை நிலங்கள் 'ஏழையின் வயல்கள்' எனப் பெயர் பெறுகின்றன. ஆஸ்திரேலியாவில் அடிலெய்டுக்கு வடமேற்குப் பகுதியில் இரும்பு அகப் படுகிறது. சிட்னி என்னுமிடத்தில் செம்பும், டாஸ்மேனியாவில் சரளேயும் (கிரைனேட்) கிடைக் கின்றன. இவை தவிர, சிட்னியிலும், அதன் சுற்றுப்புறத்திலும் நிலக்கரி வெட்டியெடுக்கப்படு கின்றது. ஆயினும் அங்குக் கிடைக்கும் நிலக்கரி மிகப் பழைய கலப்பு உலோகமாகவே காணப்படு கிறது. எனினும் அதனைத் தூய்மை செய்தால் மிகப் பயனுடைய நிலக்கரியாக மாறுகிறது. ஆஸ்திரேலியாவில் பழுப்பு நிலக்கரி மெல்பர்ன் என்னுமிடத்தில் வெட்டி யெடுக்கப்படுகிறது.

## தட்ப வெப்பம்

ஆஸ்திரேலியாவிலுள்ள மிகக் குளிர்ந்த இடம், ஐரோப்பாவிலுள்ள ஸ்பெயின், தென் இத்தாலி ஆகியவற்றின் மிக வெப்பமான இடங்களே ஒத் திருக்கிறது. இதனால் ஆஸ்திரேலியா வெப்பம் மிகுந்த நாடுபோலும் என்று எண்ணுதல் பொருந் தாது. இங்குப் பெய்யும் பருவமழை வெப்பத்தைத் தணிவித்துத் தண்மையை அளிக்கின்றது.

ஆஸ்திரேலியாவில் மழை பெய்வதை நான்கு வகைகளாக்கிக்கூறலாம். வடபகுதியில், கோடைக் காலத்தில் பரவலான மழை பெய்கின்றது; தென் பகுதியில், மாரிக்காலத்தில் பரவலான மழை கரை

யோரம் பெய்கின்றது; கிழக்குப் பகுதியில், இடை யருத பெருமழை கொட்டுகின்றது; உள்நாட்டுப் பகுதியில் கடற்புயல்கள் தோன்றுகின்ற காலங் களில் ஆங்காங்கே பெருமழையும், பரவலான மழையும் பொழிகின்றது. ஆண்டுக்கு நாற்பது அல்லது ஐம்பது அங்குல மழையே ஆஸ்திரேலி யாவில் பெய்யும் பெருமழை என்னலாம்.

ஆஸ்திரேலியாவில் மழைக் காலத்தில் கடற் புயல்கள் வீசத் தொடங்குகின்றன. கிழக்கு மேற் காக வீசுகின்ற கடற்புயல்களின் காரணமாக மழை பெய்கின்றது. எப்போதாவது ஒருமுறை வீசும் தென் மேற்குப் புயற்காற்று, ஆஸ்திரேலியாவின் உள்நாட்டுப் பகுதிகளில் மழையைக் கொடுக் கிறது. சில காலங்களில் கடற்புயல்களைப் போலவே சிறிய கடல்கோள்கள் தோன்றுகின்றன. ஜனவரி, பிப்ரவரி, மார்ச்சு ஆகிய மூன்று திங்களில் இக் கடல்கோள்களின் விளைவாக முத்துக் குளிக்கும் தொழிலாளர் உயிரிழக்கின்றனர்.

ஆஸ்திரேலியாவில் வடபகுதியில் பனி பெய் தல் உண்டு. கிழக்கிலும் பெரும்பனி பல ஆண்டு களுக்கு ஒருமுறை கொட்டும் என்று கூறுகின் றனர். ஆண்டு முழுமையும் பனிக்கட்டி விழும் இடங்கள் ஆஸ்திரேலியாவில் இல்லை; சில மலைச் சிகரங்களிலே பனிப் படலங்கள் கோடையின் முடிவிலும் படிகின்றன.

**குளங்கள்**

இத்தகைய இயற்கை அமைப்புடைய ஆஸ்தி ரேலியாவில் செயற்கையாகவும் நீர்வளத்தைப் பெருக்குவது தேவையாயிற்று. இங்குப் பயிர்த் தொழிலுக்காகக் களிமண் தரையைக் குடைந்து குளங்கள் வெட்டப்பட்டுள்ளன. ஆங்காங்கே காற்றூடிகளும், மின் பொறிகளும் குளங்களி லிருந்து நீரிறைக்கச் சுழலுகின்றன. பல இடங் களில் மணற்கேணிகள் பாதுகாக்கப் படுகின்றன. இயற்கையாகவும் செயற்கையாகவும் நீர்வளத்தை எவ்வளவு பெருக்கினுலும், போதிய நீரின்மையால் ஆஸ்திரேலியாவில் பயிர்த்தொழில் வளர்ச்சியுற வில்லே. ஆயினும் உழவின் செழிப்பை உண்டாக் கும் பெருமுயற்சி ஆஸ்திரேலியாவில் இன்னும் நடந்துவருகிறது.

# 3. உள்நாட்டு ஆராய்ச்சியும் குடியேற்றமும்

## குடியேற்றம் நிகழக் காரணங்கள்

ஆஸ்திரேலியாவில் ஆங்கிலேயர் குடியேறக் காரணம் என்ன? அரசியல், வரலாறு ஆகியவற்றின் வாயிலாக இதனை ஆராய்தல் வேண்டும். பண்டைக் காலத்தில் பிரிட்டன், தன் நாட்டுக் கைதிகளை அமெரிக்காவில் குடியேற்றிவந்தது. ஆனால் அமெரிக்கா தன்னுரிமை பெற்ற பின்னர்ப் பிரிட்டிஷ் கைதிகளைத் தங்கள் நாட்டில் ஏற்றுக் கொள்ள அமெரிக்கர் மறுத்துவிட்டனர். இதனால் பிரிட்டன் தன் நாட்டுச் சிறைகளிலுள்ள கைதிகளின் எண்ணிக்கையைக் குறைக்க விரும்பியது; அதன்பொருட்டு ஒரு புதிய குடியேற்ற நாட்டைத் தேடியது. ஆஸ்திரேலியா கண்டுபிடிக்கப்பட்டவுடன் அப்புதிய கண்டத்தில் பிரிட்டிஷ் கைதிகளைக் குடியேற்ற வேண்டுமென்று பிரிட்டிஷ் அரசாங்கம் முடிவுசெய்தது. மேலும் பிரிட்டனில் "ஏழை மக்கள் சட்டம்" (Poor Men's Act) உருவாக்கப்பட்டிருந்தும் ஏழைகளின் துன்பங்கள் பெருகின. ஏழை மக்களுக்காக மிகுந்த வரி கட்டுவதில் செல்வர்கள் வெறுப்படைந்தனர். அதனால் பிரிட்டிஷ் அரசாங்கம் ஏழை மக்களை ஆஸ்திரேலியாவில் குடியேற்றக் கருதியது. மேலும்

பிரிட்டிஷ் முதலாளிகள், ஆஸ்திரேலியா மேய்ச்சல் நிலமுடைய நாடு என்பதைக் கண்டு, அங்குச் சென்று பிரிட்டிஷ் நெசவு ஆலைகளுக்குக் கம்பளமும், பிரிட்டிஷ் தொழிற்சாலைகளுக்கு மூலப் பொருளும் மிகுதியாகப் பெறலாம் என்று நினைத் தனர். இவ்வாறு சிறைக் கைதிகள், ஏழைகள், முதலாளிகள் ஆகிய மூவகையினரே ஆஸ்திரேலி யாவில் முதன் முதலில் வந்திறங்கினர். ஆஸ்தி ரேலியாவில் குடியேற்றம் நிகழ்வதற்கு நேர்ந்த அரசியல், வரலாற்றுச் சூழ்நிலை இதுவேயாகும்.

## முதற் குடியேற்றம்

கி. பி. 1778-இல் ஆஸ்திரேலியாவின் கிழக்குக் கரையிலுள்ள ஜாக்ஸன் என்னும் கடற்கரை ஊர் முதலில் அமைக்கப்பட்டது. அங்கு இங்கிலாந்தி லிருந்து கைதிகள் அனுப்பப்பட்டனர். இங்ஙனம் கைதிகளை அனுப்புதல் தொடர்ந்து ஐம்பதாண்டு கள் நடைபெற்றது. ஜாக்ஸன் என்பது புதிய தென் வேல்ஸ் மாகாணத்தில் ஏற்பட்ட புதிய ஊராகும். இதே சமயத்தில் டாஸ்மேனியாவிலும் கைதிகளின் குடியேற்றம் நடைபெற்றது. டாஸ் மேனியா கி. பி. 1825-இல் தனி மாகாணமாயிற்று. கி. பி. 1835-இல் டாஸ்மேனியாவிலிருந்து சில குடிகள் புதிய தென் வேல்ஸ் மாகாணத்திலுள்ள 'பிலிப்' என்னும் துறைமுக ஊரை அடைந்து குடியேறினர். இக்குடியேற்றம் பெருகிக் கி. பி. 1851-இல் விக்டோரியா மாகாணம் உண்டாக்கப் பட்டது. கி. பி. 1877-இல் 'சுவான்' ஆற்றங்

கரையில் குடியேற்றம் நிகழ்ந்தது. இதுவும், 'ஜார்ஜ் அரசர் நீரிணைப்பு' (King George Sound) என்னும் இடத்தில் அமைந்த படைத்தள ஊரும் மேற்கு ஆஸ்திரேலிய மாகாணத்தை அமைக்க அடிப்படையாக அமைந்தன. வின்செண்ட் வளை குடாவை அடுத்த நிலப் பகுதியில் கி. பி. 1835-37-இல் மற்றொரு குடியேற்றம் நடைபெற்றது. அப் பகுதி தென் ஆஸ்திரேலிய மாகாணமாகப் பிரிக்கப்பட்டது. கி. பி. 1859-இல் புதிய தென் வேல்ஸ் மாகாணத்திலிருந்து குவீன்ஸ்லாந்து பிரிக்கப் பட்டது.

### சிட்னி நகரம்

தொடக்கத்தில் **சிட்னி** என்னும் துறைமுக நகரில் கவர்னர்களாயிருந்த அதிகாரிகள் சிட்னியிலிருந்து கண்டத்தின் உட்பகுதியில் சிறிது தொலைவுவரை சாலைகளை அமைத்தனர்; ஆறுகளின் குறுக்கே பாலங்களைக் கட்டினர். ஆஸ்திரேலிய ஆடுகள் கம்பளம் நெய்யத்தக்க மயிர் உடையவை ஆதலால் அவற்றைக்கொண்டு கம்பளத் தொழில் நடத்தலாம் என்பதை அறிந்த அதிகாரிகள், கி. பி. 1803-ஆம் ஆண்டிலேயே அவ்வாடுகளை வளர்க்க உதவி செய்தனர். இந்த ஆடுகளின் மயிரைக் கொண்டு கம்பளங்கள் நெய்து ஆஸ்திரேலிய மக்கள் பொருட் சிறப்பு எய்தினர். சிட்னி நகரம், புதிய தென் வேல்ஸின் தலைநகரமும் சிறந்த துறைமுக நகரமும் ஆயிற்று.

### மெல்பர்ன் நகரம்

இது 'யாரா—யாரா' ஆற்றங்கரையில் அமைந்திருப்பது. கி.பி. 1835-இல் இந்நகரில் சில குடிசைகளே காணப்பட்டன. ஆயின், ஐந்தாண்டுகளுக்குள் ஆறாயிரம் மக்களைக் கொண்ட ஊராக இது வளர்ச்சி பெற்றது. சிட்னியிலிருந்த கவர்னருக்குக் கீழ்ப்பட்ட அதிகாரி மெல்பர்னிலிருந்து குடியேற்றத்தைக் கவனித்து வந்தார். இவ்வாறே தென் ஆஸ்திரேலிய மாகாணத்தின் தலைநகரமான **அடிலெய்ட்** என்னும் ஊரிலும் ஒரு கவர்னர் இருந்தார். மேற்கு ஆஸ்திரேலிய மாகாணத்தின் தலைநகரான **பெர்த்** நகரிலும் கவர்னர் ஒருவர் இருந்து வந்தார். இக்கவர்னர்கள் தத்தம் மாகாணத்தில் சாலைகள் அமைப்பதிலும் குடியேறிய மக்களுக்கு வேண்டிய பிழைப்பு முறைகளை உண்டாக்கிக் கொடுப்பதிலும் பெரிதும் முனைந்திருந்தனர்.

### முதல் இருபதாண்டுகள்

ஆஸ்திரேலியாவில் பிரிட்டிஷ் குடியேற்றம் நடந்து இருபதாண்டுகளில் பல மாறுபாடுகள் நிகழ்ந்தன. அவற்றுள் சிலவற்றை இங்குக் காண்போம்: முதன் முதலில் புதிய தென் வேல்ஸில் கைதிகள் குடியேற்றப்பட்டனர். அக் கைதிகளை அடக்கி ஆளுவதற்குக் கவர்னர் ஒருவர் பிரிட்டிஷ் அரசாங்கத்தாரால் நியமிக்கப் பெற்றார். கைதிகள் நிலங்களில் உழவு செய்து பாடுபட்டனர். அப்போது கூட்டுப்பண்ணை முறையில் உழவு நடைபற்று வந்தது. பின்னர்ச் சில ஆண்டுகள் கழித்து

ஆஸ்திரேலியாவில் பிரிட்டனைச் சேர்ந்த பெரு வாணிகக் கூட்டத்தார் அரசாங்கச் சலுகைகள் பெற்று நிலங்களைத் தனியுடைமையாக்கிக்கொண் டனர். அத்தகைய பெரிய முதலாளிகளுக்குப் பிரிட்டிஷ் அரசாங்கம் கைதிகளைப் பண்ணையாட் களாகக் கொடுத்துதவியது; மேலும் பல உழவுக் கருவிகளையும் அனுப்பியது. அக்கைதிகள் பிரிட் டிஷ் முதலாளிகளுடைய நிலங்களில் பாடுபட்டு உழவு செய்தனர். முதலாளிகளுக்குக் காட்டிய பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பேராதரவும், பிரிட் டிஷ் கவர்னர்களின் ஆணையும் ஒன்றோடொன்று முரண்படலாயின. அதனால் பல கலகங்கள் ஏற் பட்டன. முதலில், நிலங்களைத் தனியுடைமை யாக்கிக்கொண்ட முதலாளிகளைக் கவர்னர் யாரும் தடுக்க இயலவில்லை. முதலாளிகள் முதலில் உழ வுத் தொழிலைப் பெருக்கிப் பின்னர்க் கம்பளங்களை மிகுதியாக எடுத்துப் பிரிட்டனுக்கு அனுப்பினர்.

காலப்போக்கில் கம்பளத் தொழில் ஆஸ்தி ரேலியாவில் வளரத் தொடங்கியது. ஆஸ்தி ரேலியா தனது தட்பவெப்ப நிலைக்கேற்பவும், மேய்ச்சல் நில அமைப்புக்கு ஏற்பவும் கம்பளத் தொழிலுக்கே சிறந்ததன்றி, உழவுத் தொழிலுக் குச் சிறந்ததில்லை என்ற உண்மை புலப்பட்டது. எனவே, அங்குக் குடியேறிய பிரிட்டிஷ் முதலாளி கள் உழவுத் தொழிலை விடுத்துக் கம்பளத் தொழி லில் புகுந்தனர். ஆண்டுதோறும் கம்பள ஆடு களின் எண்ணிக்கை பெருகியது. கம்பளத் தொழி லின் வளர்ச்சியைக்கண்ட பிரிட்டிஷ் அரசாங்கம்

தனது நாட்டிலுள்ள கம்பளத் தொழிற்சாலை களுக்கு வேண்டிய கம்பளங்களை மேலும் மேலும் ஆஸ்திரேலியாவினின்று பெற்றுக்கொள்ள விரும்பியது.

மேய்ச்சல் பண்ணைத் தொழில் வளர்ச்சி யடைந்து வந்தபோது ஆடுகளுக்குப் போதுமான நிலம் இல்லாமையால் புதிய நிலங்களைக் கண்டு பிடிக்க வேண்டும் என்ற ஆர்வம் எழுந்தது. சில காலமாகக் கப்பலோட்டிகள் கடற்செலவை மேற் கொண்டு புதிய நிலம் காணப்படுமா என்று அறி யச் சுற்றி வந்தனர். கப்பலோட்டிகளின் முயற்சி கடற்கரையில்தான் நடந்தது; கடற்கரைக்கு அப்பால் உள்ள நிலப்பரப்பில் ஆராய்ச்சி செய் வது அவர்களால் இயலவில்லை. எனவே, ஆஸ்தி ரேலியாவில் புதிய இடங்களைக் காண்பதற்குப் பல அறிவியலாரும், தொழிலாளரும் ஆராய்ச்சி யைத் தொடங்கினர்.

**உள்நாட்டு ஆராய்ச்சி**

முதற் குடியேற்றம் ஏற்பட்டு இருபத்தைந்து ஆண்டுகள் வரையில் சிட்னிக்கு வடக்கிலும் தெற் கிலும் ஏறத்தாழ நூறு மைல் அளவுள்ள கரை யோர நிலப்பகுதி மட்டுமே குடியேற்ற மக்களுக் குத் தெரிந்திருந்தது. இப்பகுதிக்கு மேற்கே நீலமலைத் தொடர் என்னும் பெயரில் பெரிய பீட பூமி அமைந்திருக்கிறது. கி. பி. 1813-இல் புதுமை காண்பதில் ஆர்வம் கொண்ட வீரர் சிலர் 'நீப்பி யன்' ஆற்றைக் கடந்து, அப்பீடபூமியை அடைந் தனர்; 'மீன்' ஆற்றை அடுத்த பசும்புல் பள்ளத்

தார்க்கைக் கண்டனர். இம்முயற்சிக்குப் பிறகு சிட்னியிலிருந்து 'மாக்குவரி' ஆறுவரை மலைகளி னூடே ஒரு பாதை அமைக்கப்பட்டது; 'பாதர்ஸ்ட்' என்னும் நகரமும் அமைந்தது. பாதர்ஸ்ட் என்ற குடியேற்ற நகரத்திலிருந்து வீரர் சிலர் மேற்கு நோக்கிச் சென்றனர்; 'லாக்லன்' ஆற்றைக் கண்டு பிடித்தனர். ஆக்ஸ்லி என்னும் அறிஞர் லாக்லன், மாக்குவரி என்னும் ஆறுகளின் பிறப்பிடங்களைக் கண்டறிந்தார். அவ்வீரர் அர்பத்நட் மலைத்தொடரையும், லிவர்ப்பூல் சமவெளியையும் நடந்து கடந்தார்; பின்னர்ப் பீல், காக்பூன் என்னும் ஆறுகளைக் கடந்து, மாக்குவரி என்னும் கடற்கரை ஊரை அடைந்தார். இவ்வாறே காப்டன் கிங் முதலிய அறிஞர்கள், சிட்னி முதலிய கடற்கரை நகரங்களிலிருந்து மூன்று திசைகளிலும் பல மாதங்கள் கடந்து சென்று, பற்பல ஆறுகளையும் மலைத்தொடர்களையும், ஏரிகளையும், பாலைவெளிகளையும், பசும்புல் வெளிகளையும் கண்டறிந்தனர். இம்முயற்சியில் இப்பெருமக்கள் பட்ட இன்னல்கள் பலவாகும். இவருள் பிரயாணத்தில் உணவின்றி இறந்தவர் சிலர்; நீரின்றி இறந்தார் சிலர்; ஆஸ்திரேலியப் பழங்குடி மக்களால் கொல்லப்பட்டவர் சிலர். ஆயினும் புதுமை காண்பதில் வேட்கை கொண்ட இப் பெருமக்கள், உலையா ஊக்கத்துடன் மேற்கொண்ட உழைப்பின் பயனாகவே ஆஸ்திரேலியாவைப்பற்றிய விவரங்கள் பலவற்றை நாம் அறிந்து மகிழ்கின்றோம்.

**மக்கள் தொகை**

இன்று ஆஸ்திரேலியாவில் ஒரு சதுரமைலுக்கு இரண்டரைப் பேரே வாழ்கின்றனர். இன்றைய மக்கள் தொகை எண்பது லட்சமாகும். ஏறக் குறைய முப்பது லட்சம் சதுரமைல் நிலப்பரப் புடைய ஆஸ்திரேலியாவில் மக்கள் இடநெருக் கடியின்றி வாழ்கின்றனர். புதிய தென்வேல்ஸ், விக்டோரியா ஆகிய இரு மாநிலங்களே மிகப் பெருகிய மக்கள் தொகை உடையன. மக்கள் தொகையில் ஆண்களும் பெண்களும் ஏறக்குறைய ஒத்த அளவினராகவே இருக்கின்றனர். ஆயினும் நகர்ப்புறங்களிலும், புதுக் குடியிருப்புக்களிலும் பெண்கள் தொகை சிறிது மிகுதியெனக் கூற லாம்; குவீன்ஸ்லாந்து, மேற்கு ஆஸ்திரேலியா போன்ற சிற்றூர்ப் பகுதிகளில் பெண்கள் தொகை சிறிது குறைவாக உள்ளது.

ஆஸ்திரேலியாவில் ஐரோப்பியர் அல்லாதார் ஐம்பதிணுயிரவர் உள்ளனர். இவர்களுள் ஏறக் குறைய இருபத்தையாயிரவர் ஆசிய மக்கள். ஆசிய மக்களுள் பலர் முத்துக் குளிக்கும் தொழி லாளராகவும், சீனர்களாகவும் காணப்படுகின் றனர்; வேறு பலர் சலவைத் தொழில், தோட்டத் தொழில், சமையல் தொழில் முதலிய தொழில் களை நகரங்களில் செய்து வாழ்கின்றனர். பொது வாகக் கூறின், ஆஸ்திரேலியாவில் நூற்றுக்குத் தொண்ணூற்றெட்டுப் பங்கினர் பிரிட்டிஷ் மக் களே ஆவர்.

### நகரங்களில் மக்கட் பெருக்கம்

இவ்வாறு பல வகைகளில் ஆஸ்திரேலியாவின் மக்கள் தொகையைக் கருதும்போது ஓர் உண்மை புலப்படுகின்றது: அஃதாவது நகரங்களில் வாழும் மக்களே இங்கு மிகுந்துள்ளனர் என்பது. நூற்றுக்கு அறுபத்து நான்கு பங்குள்ள மக்களை நாம் நகரங்களில் காண்கிறோம். இவ்வாறு நகர மக்கள் தொகை பெருகியிருப்பதற்குச் சிறப்பாக மூன்று காரணங்கள் கூறப்படுகின்றன: (1) ஆஸ்திரேலியாவின் உழவரும், பிற தோட்டத் தொழிலாளரும் தங்கள் தொழிலில் நிறைந்த வருவாய் பெற்றுச் செல்வத்துப் பயனை நகரங்களில் இருந்து நுகரவே விரும்புகின்றனர். (2) மேலும் கோதுமை பயிராக்குதல், தோட்டப் பயிர்த்தொழில் முதலிய தொழில்களுக்கு நிலங்கள் பயன் படுவனவாக இருப்பினும், புதிய அறிவியற்கருவிகள் கிடைப்பதில்லை; அதனால் மக்கள் பலர் நகரங்களை நாடி வருகின்றனர். (3) கடற்கரையைச் சூழ்ந்துள்ள பெரிய நகரங்களில் இயந்திரத் தொழில் முன்னேற்றமும், வாணிக முன்னேற்றமும் வளம் பெற்றுவருகின்றன. இத்தகைய காரணங்களால் ஆஸ்திரேலியாவில் நகரமக்கள் தொகையே பெருகியுள்ளது என்று கூறலாம்.

### மக்களும் தொழில்களும்

ஆஸ்திரேலிய மக்கள் எவ்வெத் தொழில்களில் எவ்வாறு ஈடுபட்டு வாழ்கின்றனர் என்பதை இனி அறிவோம்; கி. பி. 1921-இல் எடுத்த கணக்

கின்படி மக்கள் தொகையில் இருபத்து மூன்று லட்ச மக்கள் உழைத்து உண்பவராகக் காணப் பட்டனர். இயந்திரத் தொழிலில் ஏழேகால் லட்ச மக்களும், பயிர்த்தொழிலில் ஆறு லட்ச மக்களும் ஈடுபட்டு வாழ்ந்தனர். கி. பி. 1933-இல் எடுத்த கணக்கின்படி மக்கள் தொகையில் முப்பது லட்சம் மக்கள் உழைத்துண்பவராவர். இவர் களுள் நூற்றுக்கு எழுபத்து நால்வர் ஆண்மக்களா வர். இன்று ஆஸ்திரேலியாவில் நகர வாழ்வோடு சார்ந்த தொழில்களே சிறப்புற்று வாழ்கின்றன எனவும், சிற்றூர்களைச் சார்ந்த தொழில்களும், சுரங்கத் தொழிலும் குறைந்து வருகின்றன என வும் அதிகாரிகள் என்னிடம் கூறினர்.

**மக்கள் குடியேற்றம்**

இனி ஆஸ்திரேலியாவில் நடைபெறும் குடி யேற்றத்தை ஆராய்வோம்: நகர மக்கள் தொகை பெருகுவதால், வேலையில்லாத் திண் டாட்டம் நகரங்களில் தான் ஏற்படுகின்றது. இதனை ஆராய்ந்த ஆஸ்திரேலிய அரசாங்கம், புதுக் குடியேற்றத்தைத் தடை செய்து வருகின் றது. 'வெள்ளை ஆஸ்திரேலியக் கொள்கை'யைச் சட்டமாக்கித் தென் ஐரோப்பியரான இத்தாலி யரையும், மால்டிஸ்களையும் ஆஸ்திரேலியாவில் குடியேறவிடாது தடுத்ததை நாம் ஆஸ்திரேலிய வரலாற்றில் அறிகின்றோம். மேலும் அரசாங்கம், பல இடங்களில் நெருக்கடியாக வாழும் மக்களை ஆங்காங்கே மனித வாழ்வற்ற இடங்களில் குடி யேறும்படி செய்து வருகின்றது; இதன் பொருட்

டுக் கண்டத்தின் பல பகுதிகளை ஆராய்ந்து வரு கின்றது; புதிய குடியிருப்புக்களில் வாழப் புகுந்த மக்களுக்கு வேண்டிய நிலமும், விதையும், கலப்பை யும், கல்வியும், பிற சமுதாய நலங்களும் கொடுத் துதவுகின்றது.

**மக்கள் வெளியேற்றம்**

மேலும் ஆஸ்திரேலியாவில் பல மக்களை வெளி யேற்றும் திட்டங்களும் உருவாயின. கி. பி. 1920-இல் ஏற்பட்ட 'காமன்வெல்த் கூட்டு முயற்சியும் பல அரசுகளின் குடியேற்றக் கொள்கையும்' என்ற திட்டமும், கி. பி. 1925-இல் ஏற்பட்ட 'பிரிட்டிஷ் காமன்வெல்த் அரசுகளின் வெளியேற்ற ஒப்பந் தம்' என்ற திட்டமும் குறிப்பிடத்தக்கவை. ஆனல் இத்தகைய அரசியல் திட்டங்களால் மிக்க பயன் விளையவில்லை; புதிய இடங்களைக் கண்டு பிடித்துப் புதிய குடியிருப்புக்களில் மக்களை வாழு மாறு செய்வதே பெரும் பயன் அளிக்கின்றது. மேலும் ஆஸ்திரேலிய அரசாங்கம் பலவகையான கழகங்களைத் தோற்றுவித்து, அவற்றுள் இளைஞர் களை ஒன்று சேர்த்து, உள்நாட்டின் பல இடங் களுக்கும் அனுப்பிவருகின்றது. இதனல் இட நெருக்கடியும் வேலையில்லாக் கொடுமையும் படிப் படியாகக் குறைந்து வருகின்றன என்று அரசாங்க அதிகாரிகள் என்னிடம் கூறினர்.

# 4. அரசியல்

## மாகாண அமைப்பு

ஆஸ்திரேலியாவில் கம்பள உற்பத்தி பெருகத் தொடங்கியவுடன் குடியேற்றம் வளர்ச்சியுற்றது. புதிய தென் வேல்ஸில் பாதர்ஸ்ட் என்னும் இடத்துக்கு இருபது கல் வடக்கிலுள்ள ஓரிடத்தில் கி. பி. 1851-இல் பொற்சுரங்கம் கண்டுபிடிக்கப்பட்டது. விக்டோரியா மாகாணத்தில் மெல்பர்ன் நகருக்கு அருகிலும் மற்றொரு பொற் சுரங்கம் கண்டறியப் பட்டது. இங்ஙனம் பல பொற்சுரங்கங்கள் ஒன்றன்பின் ஒன்ருகக் கண்டறியப்பட்ட செய்தி, உலக நாடுகளில் பரவியது. ஐரோப்பியரும், வட அமெரிக்கரும், சீனரும் ஆயிரக் கணக்கில் மெல்பர்ன் நகருக்கு வந்தனர். அதனுல் விக்டோரியா மாகாணத்தில் மக்கள் தொகை பெருகியது. கி. பி. 1851-ஆம் ஆண்டு விக்டோரியா நிலப்பகுதி ஒரு தனி மாகாணமாக்கப்பட்டது. அதன் பின்னர்ப் பல மாகாணங்களிலும் பொற்சுரங்கங்களும், நிலக்கரிச் சுரங்கங்களும், செப்புச் சுரங்கங்களும் கண்டறியப்பட்டன. ஆங்காங்கே மக்கள் குடியேறத் தொடங்கினர். கி. பி. 1860-இல் புதிய தென்வேல்ஸ், குவீன்ஸ்லாந்து, தென் ஆஸ்திரேலியா முதலிய மாகாணங்கள் ஏற்பட்டன. ஒவ்வொரு மாகாணமும் தனிப்பட்ட முறையில் ஆட்சி நடத்தத் தொடங்கியது; சட்டசபை

அமைக்கப்பட்டது. குடியேறிய மக்களுக்குச் சட்டத்தின் மூலம் நிலப்பங்கீடு செய்தல், பயிர்த் தொழிலை ஊக்குவித்தல், கால்நடைகளை வளர்த்தல், மேய்ச்சல் நிலங்களைப் பாதுகாத்தல் என்பன பற்றிப் பல சட்டங்கள் ஏற்படுத்தப்பட்டன. ஆஸ்திரேலியாவில் முதலில் குடியேறியவர் இங்கிலாந்திலுள்ள வேல்ஸ் பகுதியினராதலின், தாம் குடியேறிய நிலத்திற்குப் புதிய தென்வேல்ஸ் எனப் பெயரிட்டனர். இங்கிலாந்து அரசியாகிய விக்டோரியா காலத்தில் மக்கள் குடியேறிய நிலம் விக்டோரியா மாகாணம் எனப் பெயர் பெற்றது. அதன் தலைநகர், விக்டோரியா அரசியாரின் முதல் அமைச்சரான மெல்பர்ன் பிரபுவின் பெயரைப் பெற்றது.

**நடு அரசாங்கம்**

ஆஸ்திரேலியாவுக்கு நடு அரசாங்கம் (Commonwealth) ஏற்படுதல் வேண்டும் என்பதைப் பல மாகாணங்கள் விரும்பின. கி. பி. 1899-இல் மாகாண முதல் அமைச்சர்கள் மெல்பர்ன் நகரத்தில் கூடி, நடு அரசாங்கம் அமைப்பதற்குரிய சட்டதிட்டங்களை வரையறுத்தனர். புதிய தென் வேல்ஸ், விக்டோரியா, தென் ஆஸ்திரேலியா, குவீன்ஸ்லாந்து, மேற்கு ஆஸ்திரேலியா, டாஸ்மேனியா என்னும் ஆறு மாகாணங்களும் சேர்ந்து நடு அரசாங்கத்தை உருவாக்கின. இம்மாகாணங்களின் ஆறு பிரதிநிதிகளைக்

கொண்டதே **செனேட் சபை** எனப்படும். இது நடு அரசாங்கத்தின் மேல் சபையாகும்; கீழ்ச் சபையில் ஒவ்வொரு மாகாணத்திலிருந்தும் தேர்ந் தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் உறுப்பினராக இருப்பர். இவ்விரண்டு சபைகளின் உறுப்பினர் ஒவ்வொருவரும் ஆண்டு ஒன்றுக்கு நானூறு பவுன் ஊதியமாகப் பெறுவர். இப்பேரவைகள் முழு ஆஸ்திரேலியாவைப் பற்றிய வாணிகம், கப்பல் தொழில், இரயில் போக்குவரவு, வரி விதிப்பு, தபால் தந்தி, நாட்டுப் பாதுகாப்பு, மக்கள் தொகை கணக்கு, நாணய மாற்று, அரசாங்க அளவைகள், வங்கித் தொழில், மணமும் மண நீக்கமும், குடிபுகுதல், குடியேற்றம், கைத்தொழில், வழக்குத் தீர்ப்பு முதலிய துறைகளில் தமது அதிகாரத்தைச் செலுத்தும். இவ்விரண்டிற்கும் மேலதிகாரியாக—அரசப் பிரதிநிதியாக ஒருவர் அமர்த்தப்பட்டார். ஆஸ்திரேலிய உயர் நீதி மன்றம் ஏற்படுத்தப்பட்டது. சுருங்கக் கூறின், நமது இந்திய நாட்டிலுள்ள மாகாண அரசாங்கங்களைப் போல ஆஸ்திரேலிய மாகாணங்கள் மாகாண ஆட்சியை நடத்தி வந்தன. டெல்லியில் இருக்கும் நடு அரசாங்கத்தைப் போல ஆஸ்திரேலிய நடு அரசாங்கம் ஆஸ்திரேலியா முழுவதிலும் ஆட்சி நடத்தத் தொடங்கியது. இணைப்பு அரசாங்கத்தின் தலைநகரம் புதிய தென் வேல்ஸில் உள்ள **கான்பரா** என்பது. நடு அரசாங்கத்தின் நேர்பார்வையில் வடக்கு மாகாணம் என்பது விளங்கியது. இந்த நடு அரசாங்கத்திற்குக்

காமன்வெல்த் ஆப் ஆஸ்திரேலியா ' என்பது பெயராகும்.

### சட்டங்கள்

எல்லா நாடுகளிலும் ஏற்பட்டுள்ளபடியே தொழிலாளர்க்குரிய வேலைநேரம், ஓய்வு நேரம், சம்பளம், வயது ஆகியன பற்றிய சட்டங்களை ஆஸ்திரேலிய அரசாங்கம் செய்துள்ளது ; இவ்வாறே பண்ணைகளிலும், சுரங்கங்களிலும், காடுகளிலும், தோட்டங்களிலும் வேலை செய்வோரின் சுகாதார வசதிகளைக் கவனிக்கச் சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. பெண் தொழிலாளருக்கு உரிய சட்டங்களும் செய்யப்பட்டுள்ளன.

### சமூகநலத் திட்டங்கள்

சமூகத்தில் மிகத் தாழ்ந்துள்ள மக்களது பொருளாதார நிலையையும் வாழ்க்கை நிலையையும் உயர்த்த வேண்டும் என்பது அரசாங்கத்தின் அழுத்தமான கருத்தாகும். இது நடைமுறையில் நிறைவேறச் சமூகநலத் திட்டங்கள் ஏற்பட்டுள்ளன. அவற்றை ஐவகையாகக் கூறலாம்: (1) கட்டாயக் கல்வி, நூல் நிலைய ஏற்பாடு, பொழுதுபோக்கு நலங்கள், மின்சார நலங்கள் முதலியன. (2) குடிமக்கள் அனைவருக்கும் வேலை தேடித்தருவதில் அரசாங்கம் முனைதல் குறிப்பிடத்தக்கது. இதற்குரிய பல திட்டங்களை அரசாங்கம் நிறைவேற்றியிருக்கின்றது. (3) அலுவலிலிருந்து ஓய்வு பெற்றவர்க்கும், உடற்குறைவு உடையவர்க்

கும், கைம்பெண்களுக்கும் அரசாங்கம் உதவிச் சம்பளம் கொடுக்கின்றது; மணம் செய்து கொள்வதற்கும், பிள்ளை வளர்ப்புக்கும் கடன் கொடுக்கத் திட்டம் வகுத்துள்ளது. (4) புதிய நகரங்களை அமைக்கவும், பிற்போக்கு வாழ்விடங்களைத் தூய்மைப்படுத்தவும், மக்களுக்குத் தேவைப்படும் நன்னீரை வழங்கவும், கழிவு நீரை அப்புறப்படுத்தவும் சில திட்டங்கள் கையாளப்படுகின்றன. (5) வீடு கட்டுதல், சிறிய தொழில்களைத் தொடங்குதல் முதலியவற்றுக்குத் தேவையான முதலை, அரசாங்கம் கடனாக உதவுகிறது.

இவையல்லாமல், ஆஸ்திரேலிய அரசாங்கம், வெள்ளத்தாலும் நிலநடுக்கத்தாலும் ஏற்படுகின்ற துன்பங்களைப் பழுது பார்த்துச் சீர்திருத்தவும் பல திட்டங்களை அமைத்துள்ளது. மக்கள் தங்கள் செல்வத்துள் சிறிதளவைச் சேமித்து அரசாங்கத்திற்குக் கொடுப்பது பேருதவியாகும் அன்றோ? இத்தகைய வாழ்க்கையே வருமுன்னர்க் காக்கும் பெருவாழ்வாகும். இதனை மக்கள் உணருமாறு செய்வதற்கே அரசாங்கம் நாட்டு நலத்திட்டத்தையும் ஏற்படுத்தியுள்ளது. நிறைந்த வருவாயுள்ள ஒவ்வொருவரும் தமது வருவாயில் ஓர் அளவை அரசாங்கத்திற்குச் சில தவணைகளில் செலுத்துகின்றனர். இவ்வாறு மக்கள் செலுத்திய நிதி, சமூக நலத்திற்கே பயன்படுகிறது.

### அரசியல் தூதுவர்

ஆஸ்திரேலிய அரசாங்கத் தூதுவர் ஒவ்வோர் அயல் நாட்டிலும் ஒருவராக இருந்துவருகிறார். ஆயின், இலண்டனில் மட்டும் ஆஸ்திரேலிய மாகாணம் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு தூதுவர் இருந்துவருகிறார். ஒவ்வோர் ஆஸ்திரேலிய மாகாணமும் பிரிட்டனுடன் தனித்த முறையில் உறவு கொண்டிருப்பதே இதற்குக் காரணம்.

### நியூஜீலந்துடன் உறவு

ஆஸ்திரேலியாவையும் நியூஜீலந்தையும் 'தெற்குப் பகுதி நாடுகள்' என்னும் பொருளில் 'ஆஸ்திரலேஸியா' என்று மேனாட்டார் அழைப்பர். நியூஜீலந்து ஆஸ்திரேலியாவுக்கு ஏறக்குறைய 1200 மைல் தென்கிழக்கே உள்ள தீவுக்கூட்டமாகும். அங்கு இருபது லட்ச மக்கள் வாழ்கின்றனர். இந்தியரும் இரண்டு ஆயிரவர் அங்குக் குடியேறியுள்ளனர்.

ஆஸ்திரேலியா, நியூஜீலந்து ஆகிய இருநாடுகளின் அமைச்சர்களும் அடிக்கடி கூடுகின்றனர்; ஒரு முறை நியூஜீலந்தின் தலைநகரான வெல்லிங்டனிலும் மற்றொரு முறை ஆஸ்திரேலியாத் தலைநகரான கான்பராவிலும் சந்திக்கின்றனர். வெல்லிங்டனிலும் கான்பராவிலும் அரசாங்க அலுவலகங்கள் நிறுவப் பெற்றுள்ளன. இத்தகைய நட்புமுறையில் ஆஸ்திரேலியாவும் நியூஜீலந்தும் மனம் ஒன்றுபட்ட தமையனும் தம்பியும் போல

உறவாடி வருகின்றன; இன்ப துன்பங்களில் ஒன்றுபட்டு உழைக்கின்றன.

## அரசியல் அமைதி

ஆஸ்திரேலியாவில் பலதுறை வளர்ச்சிக்கும் அடிப்படையான காரணம், அந்நாட்டு அரசியல் கட்சிகள் அனைத்தும் நாட்டு முன்னேற்றம் பற்றிய அடிப்படைக் கருத்தில் அசைக்க முடியாத ஒற்றுமை உடையனவாக இருத்தல் ஆகும். பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்பட்ட நாடுகளிலிருந்து இறக்குமதியாகும் பொருள்களுக்குக் குறைவான வரி விதித்தல், வெள்ளையரையே ஆஸ்திரேலியாவில் குடியேற்ற வேண்டும் என்னும் கொள்கை, பிரிட்டனுடன் உறவு கொண்டிருத்தல் போன்ற கொள்கைகளில் எல்லாக் கட்சிகளும் ஒத்த கருத்துடையனவாக இருக்கின்றன. நாட்டின் சிறப்புத் தொழில்களை அரசியலார் நடத்த வேண்டும் என்பதை எல்லாக் கட்சிகளும் ஆதரிக்கின்றன. இவ்வாறு அடிப்படைக் கொள்கைகளில் ஒற்றுமை கொண்டிருத்தலாலும், தேர்தல் பிரசாரம் வானொலி வாயிலாகவே நடைபெறுவதாலும், அந்நாட்டில் கட்சிக் குழப்பங்கள் இல்லை; கட்சிகளிடையே பகைமை இல்லை; ஒருவரை ஒருவர் தாக்கிப் பேசுவது இல்லை; எல்லாக் கட்சியினரும் சிறந்த மனிதப் பண்புடன் நடந்துகொள்கின்றனர்.

# 5. கல்வி

## தொடக்கப் பள்ளி

ஆஸ்திரேலியாவில் நடைபெறும் கல்விமுறை நம்மவர் கருத்தூன்றிப் படித்து உணரத்தக்கது. அங்கு ஒவ்வொரு குடிமகனும் பதினான்கு ஆண்டு வரை இலவசக் கட்டாயக் கல்வி கற்க வசதியிருக்கிறது. அங்கு நடைபெறும் தொடக்கப் பள்ளிகள் பிள்ளைகள் விரும்பும் இன்பப் பூங்காக்களாக இலங்குகின்றன. பள்ளியில் பிள்ளைகளுக்கு முற்பகலில் பாலும் இடைவேளையில் உணவும் அரசாங்கம் கொடுத்துதவுகின்றது. அங்கு நான்கு வகைத் தொடக்கப் பள்ளிகள் பணியாற்றுகின்றன.

(1) **அரசாங்கப் பள்ளிகள் :** இவை அரசியலாரால் நடத்தப்படுகின்றன. பிள்ளைகளை உயர்நிலைப்பள்ளிக்குரிய மாணவராகச் செய்வது இவற்றின் கடமையாகும். இப்பள்ளி ஒவ்வொன்றும் அஃது அமையப்பெற்ற ஊரிலுள்ள மாணவருடைய பெற்றோரும் பொது மக்களும் சேர்ந்துள்ள சங்கத்தின் மேற்பார்வையில் இருந்து வருகின்றது. ஏறத்தாழ எண்பது பிள்ளைகள் உள்ள ஒவ்வோர் ஊரிலும் இப்பள்ளி அமைந்துள்ளது.

(2) **அரசாங்க உதவிபெறும் பள்ளிகள் :** இப்பள்ளிகள் பிள்ளைகளின் பெற்றோர் ஒத்துழைப்பால் அமைந்தவை. இத்தகைய ஒரு பள்ளியின்

மாதச் செலவின் ஒரு பகுதியை அரசியலார் ஏற்கின்றனர்; எஞ்சிய பகுதியை ஊரார் ஏற்கின்றனர். இப்பள்ளி ஆசிரியரது சம்பளம் குறைவானது. அதனால் அவருக்கு ஊரார் இலவச உணவு அளிக்கின்றனர். இக்கூட்டுறவால் பிள்ளைகளின் பெற்றோரும் ஆசிரியரும் நெருங்கிப் பழகுகின்றனர். நிலமுடையவரும் பணமுடையவரும் இவ்வாசிரியருக்குப் பல வழிகளில் உதவிபுரிகின்றனர்.

(3) **அஞ்சல் முறைப் பள்ளிகள் :** ஆஸ்திரேலியாவில் பண்ணைகள் மிகுதியாக இருக்கின்றன. அவை ஒன்றுக்கொன்று பல மைல் தொலைவில் உள்ளன. அதனால் அப்பண்ணைகளில் வாழும் பிள்ளைகள் ஓரிடத்தில் ஒன்று சேருவதில்லை. எனவே ஒவ்வொரு பண்ணையிலுமுள்ள பிள்ளைகளுக்குத் தனிப்பட்ட முறையில் கல்வி கற்பிக்க வேண்டும். ஆயின், ஒவ்வொரு பண்ணையிலும் பள்ளி வைக்கத் தக்க அளவில் பிள்ளைகள் இல்லை. ஆஸ்திரேலியா அரசாங்கக் கல்வித்துறையினர் இப்பண்ணைப் பிள்ளைகளுக்கு அஞ்சல் வாயிலாகக் கல்வி கற்பிக்கின்றனர். ஒவ்வொரு பண்ணையிலும் ஒரு பள்ளிக்கூடக் கட்டடம் அமைந்திருக்கிறது. அப்பண்ணையிலுள்ள பிள்ளைகள் அங்குக் கூடுவர். அப்பிள்ளைகள் ஓர் ஆசிரியரின் மேற்பார்வையில் கல்வி கற்பர். கடிதங்கள், ஒலிப்பதிவுத் தட்டுக்கள், படங்கள், திரைப்படங்கள், வானொலி இவற்றின் வாயிலாகப் பாடங்கள் கற்பிக்கப்படுகின்றன. இப்பிள்ளைகளுக்குத் தேர்வுகளும் விடுமுறை நாட்களும் உண்டு.

(4) **கைத்தொழில் பள்ளிகள்:** பன்னிரண்டு வயது முதல் பதினைந்து வயது வரையுள்ள மாணவர் கைத்தொழில் பள்ளிகளில் கல்வி கற்கின்றனர். கோழி வளர்த்தல், தேனீ வளர்த்தல், தோல் பதனிடுதல், தச்சுத் தொழில், கொல்லுத் தொழில், பயிர்த்தொழில், சாலை அமைத்தல், அணை கட்டுதல் முதலிய பலவகைத் தொழில்கள் இங்குக் கற்பிக்கப்படுகின்றன. இங்குக் கல்வி கற்கும் மாணவர்க்குப் பகலுணவும், போக்குவரவு நலங்களும் பள்ளிச் செலவில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன. இப்பள்ளி ஆசிரியர்களும் மாணவர்களும் வீடு கட்டுவதிலும் பயிற்சி பெற்றுள்ளனர்.

**உயர்நிலைப் பள்ளிகள்**

இப்பள்ளிகள் இரண்டு வகைப்படும். ஒன்று மாணவரைக் கல்லூரிப் படிப்பிற்குத் தகுதி உடையவராகச் செய்வது; மற்றொன்று அவர்களைத் தொழில் துறையில் தகுதியுடையவராகச் செய்வது. குடும்பத் தொடர்பான பாடங்கள் பெண்களுக்குச் சிறப்பாக இப்பள்ளிகளிற் கற்பிக்கப்படுகின்றன. ஆங்கிலம், கணிதம், இசை, வரலாறு, மொழி, வாணிகம் முதலிய பாடங்கள் அனைவருக்கும் பொதுவானவை.

தொழில் பயிற்சி பெறும் மாணவருக்கு ஒவ்வொரு தொழிலையும் கற்பிக்க அவ்வத்துறையில் வல்ல தொழிலாளர் பக்கத்துத் தொழிற்சாலையிலிருந்து வருவர். இங்ஙனம் குறித்த நேரத்தில்

அவர்கள் வரவேண்டுமென்பதும், அவர்கள் பிள்ளைகளுக்குக் கற்பிக்கும் கால அளவு அவர்கள் தொழில் செய்யும் நேரமாகக் கருதப்படவேண்டும் என்பதும் அரசாங்கத்தின் கட்டளையாகும். தலைமையாசிரியருக்குப் பள்ளி எல்லைக்குள்ளேயே வீடு கொடுக்கப்படுகிறது. ம்ாணவர் விடுதிகள் மிகச் சிறந்த முறையில் நடைபெறுகின்றன.

**கல்லூரிகளும் பல்கலைக் கழகங்களும்**

ஆஸ்திரேலியாவில் இருபத்தைந்து கல்லூரிகள் இருக்கின்றன. ஆறு பல்கலைக் கழகங்கள் பணியாற்றுகின்றன. ஒவ்வொரு கல்லூரிக்கும் நூறு ஏக்கர் பரப்புள்ள பூங்காவும், விளையாடுமிடமும் அமைந்திருக்கின்றன. ஒவ்வொரு கல்லூரிக்கும் தேர்வு நடத்திப் பட்டம் வழங்கும் உரிமை உண்டு. மாணவர்க்கு இடமில்லை என்று எந்தக் கல்லூரியும் சொல்லலாகாது என்பது அரசாங்க ஆணையாகும்.

இங்குப் பல்கலைக் கழகங்களும் கல்வி கற்பிக்கும் நிலையங்களாக இருக்கின்றன. அவை தேர்வு நடத்திப் பட்டம் வழங்குகின்றன. கிராமப் பல்கலைக் கழகங்களில் பணியாற்றும் ஆசிரியர் நகரப் பல்கலைக் கழகத்தில் பணியாற்றும் ஆசிரியரைவிட மிகுந்த ஊதியம் பெறுகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வூதிய மிகுதியால் ஆசிரியர் பலர் கிராம வாழ்க்கையையே விரும்பிச் செல்கின்றனர். எனவே கிராமப் பல்கலைக் கழகங்களிலும் கல்லூரிகளிலும் ஆசிரியர் பஞ்சம் ஏற்படுவதில்லை.

நான் சிட்னியிலுள்ள பல்கலைக் கழகத்தைக் காணச் சென்றேன். அங்கு மருத்துவக் கல்வி சிறந்த முறையில் கற்பிக்கப்படுகிறது. அங்கு இந்திய மாணவரும் மருத்துவக் கல்வி கற்கின் றனர். அவர்கள் என்னைக் கண்டதும் தாயைக் கண்ட சேய்கள் போல என்னை நோக்கி மலர்ந்த முகத்துடன் ஓடிவந்து, நமது தாய்நாட்டைப் பற்றி விசாரித்தனர். இந்தியர் பலர் ஆஸ்தி ரேலியப் பல்கலைக் கழகங்களில் கல்வி கற்க ஆஸ்தி ரேலிய அரசியலார் சில ஏற்பாடுகளைச் செய்துள் ளனர் என்று சிட்னிப் பல்கலைக்கழகத் துணை வேந் தர் என்னிடம் தெரிவித்தார்.

ஆஸ்திரேலியாவின் தலைநகரான கான்பராவில் **தேசியப் பல்கலைக் கழகம்** ஒன்றிருக்கின்றது. இது ஆஸ்திரேலியாவின் பண்பாட்டை வளர்க்கவும், பட்டம் பெற்றவர் ஆராய்ச்சியில் ஈடுபடவும் துணை செய்கின்றது. கான்பராவிலுள்ள மக்கள் தொகை ஏறத்தாழ 17,000 ஆகும். இங்ஙனம் இருந்தும், அங்கு ஒரு பல்கலைக் கழகம் ஏற்பட்டிருத்தல், அம் மக்கள் கல்வியில் கொண்ட ஆர்வத்தினை நன்கு உணர்த்துவதாகும் அன்றோ?

**கல்வி நிலை**

ஆஸ்திரேலியாவில் இன்று ஏறத்தாழ 15,000 தொடக்கநிலைப் பள்ளிகள் இருக்கின்றன. அரை நாட் பள்ளிகள், பிரயாணப் பள்ளிகள் (ஒரே ஆசிரியர் பல ஊர்களுக்கும் சென்று பள்ளிகள்

வைத்துப் பாடம் கற்பித்தல்) என்னும் பலவகைப் பள்ளிகள் ஆஸ்திரேலியாவில் உள்ளன. பெரிய நல்ல நூல் நிலையங்கள் கல்வியைப் பரப்பி வருகின்றன உயர்நிலைப் பள்ளிகள் மிகச் சிறந்த முறையில் அமைக்கப்பட்டுள்ளன. ஆசிரியர் பயிற்சிப் பள்ளிகளும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. எளிய மாணவர்க்கு அரசாங்கம் பொருளுதவி செய்துவருகிறது. சிறந்த முறையில் அமைந்த பொருட்காட்சிச் சாலைகள், நூல் நிலையங்கள், நுண்கலைக் காட்சிகள் முதலியவை பெரிய நகரங்களில் அமைந்துள்ளன ஆஸ்திரேலிய அரசாங்கம் கல்விக்காக ஆண்டுதோறும் ஏறக்குறைய ஒருகோடி இருபது லட்சம் பவுன் செலவுசெய்கின்றது என்பது குறிப்பிடத்தக்கது. பள்ளி மாணவர்களுக்கு உணவு வசதிகளும் சுகாதார வசதிகளும் இலவசமாக அளிக்கப்படுகின்றன.

## ஆஸ்திரேலிய மொழிகள்

ஆஸ்திரேலியா முழுவதிலுமுள்ள பழங்குடிகள் பலதிறப்பட்டவர்; ஆதலால் அவர்கள் பேசும் மொழிகளும் பலதிறப்பட்டனவாக இருக்கின்றன. அவற்றை வடபகுதி மொழிகள் என்றும், தென் பகுதி மொழிகள் என்றும் இரண்டு வகையாகப் பிரிக்கலாம். இவ்விருவகை மொழிகளும் ஏறத்தாழ முப்பதுக்கு மேற்பட்டுள்ளன. இவற்றுள் சில, பழங்குடிகளுள் கறுப்பு நிறத்தவர் பேசுவனவாகும்; சில செந்நிறத்தவர் பேசுவனவாகும்; சில

பழுப்பு நிறத்தவர் பேசுவனவாகும். இப்பழங்குடி மக்களின் மொழிகளை ஆஸ்திரேலியரும் ஆஸ்திரேலியாவுக்குச் சென்ற பாதிரிமாரும் நன்கு ஆராய்ந்து நூல்கள் எழுதியுள்ளனர்.

**இலக்கியம்**

ஆங்கிலேயர் குடியேறியதற்கு முற்பட்ட கால இலக்கியம் ஆஸ்திரேலியாவில் இல்லை. ஆங்கிலேயர் குடியேறிய பிறகும், அவர்கள் நகரங்களை அமைத்து வளமுற வாழத் தொடங்கிய பின்னரே இலக்கியம் தோற்றமெடுத்தது. புதிய கண்டம் காணும் வேட்கையில் மக்கள் முனைந்திருந்ததாலும், பழங்குடிகளைப்பற்றிய விவரங்களை அறிய வேண்டிய தேவை ஏற்பட்டதாலும் ஆஸ்திரேலியாவின் இயற்கை அமைப்பையும், பழங்குடி மக்களின் வரலாறுகளையும், மொழிகளையும் பற்றிய நூல்களே ஆஸ்திரேலியாவில் முதலில் வெளியிடப்பட்டன. ஆங்கிலச் செய்யுட்களும், நாவல்களும் இப்போது வளர்பிறைபோல வளர்ச்சிபெற்று வருகின்றன.

# 6. போக்குவரவு

**போக்குவரவுக்கேற்ற சமவெளி**

உலகில் கானடா நாட்டிற்கு அடுத்தபடியாக ஆஸ்திரேலியாவில் நீண்ட இரயில் பாதை அமைந்திருக்கிறது. இரயில் போக்குவரவுச் சாதனங்களுடன். மோட்டாரும், வானவூர்தியும், பிற ஊர்திகளும் ஆங்காங்கே ஓடிக்கொண்டிருக்கின்றன. ஆஸ்திரேலியா சமவெளியாகப் பரந்துள்ளமை போக்குவரவுக்கு ஏற்றதாக இருக்கின்றது. இயற்கைச் சமவெளி போலவே இயற்கைத் துறைமுகங்கள் கடற்கரையில் ஒன்ருெடொன்று இணைந்தனவாக இடம் பெற்றுள்ளன. ஆகவே, ஒரு துறையினின்று மற்ெருரு துறைக்கு எளிதாகப் போக்குவரவை உண்டாக்க இயலும். மெல்பர்ன், சிட்னி, பிரிஸ்பேன் ஆகிய நகரங்களை இணைக்கும் சங்கிலித் தொடர் போன்ற நேரான பாதை எக்காலத்தும் இன்பச் செலவைக் கொடுக்க வல்லது. நேர்ப் பாதையோடு இணைகின்ற கிளைப்பாதைகளும் குறுக்குப் பாதைகளும் ஆங்காங்கே பெருநகரங்களை உடன் சேர்க்கின்றன. அவை சிற்றூர்ப்பகுதிகளையும், மேய்ச்சல் பண்ணைகளையும் நகர வாழ்வுடன் இணைக்கின்றன. ஆஸ்திரேலியாவில் நேர்ப் பாதைகள் நடு அரசினர் ஆணையின் கீழும், கிளை, குறுக்குப் பாதைகள் பல மாகாண அரசாங்கங்களின் ஆணையின் கீழும் ஒழுங்கு தவருமல் நடந்து

வருகின்றன. இன்னும் சில ஆண்டுகளுள் எல்லாப் பாதைகளையும் நடு அரசினர் தாமே எடுத்து நடத்தவும் திட்டமிட்டுள்ளனர்; மாகாண அரசாங்கங்களிடையே நிகழ்ந்த சில ஒப்பந்தங்களின் படி மோட்டார்களும், வானவூர்திகளும் இப்போது பல மாகாணங்களை ஒருங்கே இணையச் செய்கின்றன.

**பாதைகள்**

ஆஸ்திரேலியாவில் நடைபாதைகளில் சுமைகளைத் தாங்கிச் செல்கின்ற எருமைகளையும், குதிரைகளையும், கழுதைகளையும், ஒட்டகங்களையும் நாம் பார்க்கிறோம். நாட்டு வண்டிகள் சுமைகளை ஏற்றி ஆழமற்ற ஆறுகளைக் கடந்து செல்கின்றன. உழவர் பண்ணைகளில் வண்டிப் பாதைகள் போதுமான வளர்ச்சியுறாத நிலையைக் கண்ட ஆஸ்திரேலிய அரசாங்கம், மோட்டார்களையும், லாரிகளையும் அப்பண்ணைகளுக்கு அனுப்பிப் பாதைகளைச் செப்பனிட்டுள்ளது. கம்பள வாணிகம், மருந்து வாணிகம், அஞ்சல், போக்குவரவு முதலியன மோட்டார் மூலமாகவே நடைபெறுகின்றன. இதனால் ஆஸ்திரேலியாவில் மோட்டார் வைத்திருப்போர் எண்ணிக்கை மிகப்பெருகியுள்ளது. ஏறத்தாழ நான்கு பேருக்கு ஒருவர் இன்று ஆஸ்திரேலியாவில் மோட்டார் வைத்திருக்கின்றார்; அங்கு ஏறக்குறைய நான்கு லட்சம் லாரிகளும் பஸ்களும் இருக்கின்றன. ஹோல்டன் (Holden) என்னும் அழகான மோட்டார் வண்டிகள்

இங்கு உற்பத்தி செய்யப்படுகின்றன. இவை திறமையுடன் வேலை செய்கின்றன.

## ஆற்று வழிகள்

ஆற்றுவழிச் செலவில் கம்பளம், இறைச்சி, பால், கோதுமை, புல், பழங்கள் முதலியன அனுப்பப்படுகின்றன. அதற்குப் பயன்படுகின்ற நீராவிப் படகுகள், தட்டையான அடித்தளமுடையன; இரட்டை முகங்களுடன் அழகாகத் தோன்றுகின்றன. மூரே-டார்லிங் ஆற்றுத் திட்டம் போலவே, விக்டோரியா, டாலி, ரோபர் ஆகிய ஆறுகளும் வழிச் செலவுக்கும், வாணிகச் செலவுக்கும் மிக்க பயனளிக்கின்றன.

## இரயில்

கி. பி. 1939-இல் எடுத்த கணக்கின்படி ஆஸ்திரேலியாவில் இரயில் பாதையின் முழுநீளம், ஏறத்தாழ முப்பதாயிரம் மைல் ஆகும். மற்றும் மூவாயிரம் மைல் நீளமுள்ள இரயில் பாதை, தனியுடைமையாளர் சிலரால் கண்காணிக்கப்பெறுகின்றது. நடு அரசினர் பாதுகாப்பிலும் மாகாண அரசினர் பாதுகாப்பிலும் இரயில் போக்குவரவு நடைபெற்றுவருகின்றது. ஆஸ்திரேலியக் கண்டத்தின் உட்பகுதிகளை இணைக்கவல்ல நீண்ட இரயில் பாதைகளுள் டிரான்ஸ் ஆஸ்திரேலியன், சென்ட்ரல் ஆஸ்திரேலியா, பெடரல் காபிடல் டெரிடரி (Federal Capital Territory), நார்த் ஆஸ்திரேலியா என்பவை மிகச் சிறந்தவை. மேலும் பல

கிளைப் பாதைகளை அமைக்கும் திட்டங்கள் அர சாங்கத்திடம் உள்ளன. எடுத்துக்காட்டாக, டார் வின் நகரையும் அடிலெய்டு நகரையும் இணைக்க வேண்டுமென்னும் கிளர்ச்சி அண்மையில் நடந்து வருவதைக் கூறலாம்.

**வானவூர்தி**

உள்நாட்டு வானவூர்தி வழியமைப்புக் குழு வின் ஆராய்ச்சியாலும் முயற்சியாலும் ஏறக் குறைய நாற்பத்தெட்டாயிரம் மைல் நீளமுள்ள வானவழியும், இருநூற்று ஐம்பத்தாறு வானவூர்தி நிலையங்களும் ஆஸ்திரேலியாவில் அமைக்கப்பட்டு இருக்கின்றன. இம்முறையால் எல்லாப் பெரு நக ரங்களும் மிகச்சிறந்த முறையில் வான வழிகளால் இணைந்துள்ளன. புதிய கினியா, பிரிட்டன் ஆகிய நாடுகளுடன் வானவூர்திப் போக்கு வரவும் இப்போது நடந்து வருகிறது. கி. பி. 1938-இல் நிகழ்ந்த அரசியற் சட்டத்தின்படி 'பறக்கும் படகு கள்' (Flying Boats) இலண்டன் முதலிய வெளி நாட்டு நகரங்கட்கும், ஆஸ்திரேலிய நகரங்கட்கும் பறக்கத் தொடங்கின. இவை இன்றும் வெளி நாட்டு அஞ்சல் போக்கு வரவை ஒழுங்காக நடத்து கின்றன.

**வானவூர்தியால் அஞ்சல்**

ஆஸ்திரேலியாவில் உள்நாட்டு அஞ்சல் நிலை யங்கள் மிக நீண்ட தொலைவிடங்களுக்குக் கடிதங்

களை அனுப்புகின்றன; அவை பெரும்பாலும் இரயில் மூலமே நடைபெறுகின்றன. இவையன்றி வானவூர்திகளிலும் அஞ்சல் செல்லுகின்றது. ஆஸ்திரேலியாவைச் சுற்றியுள்ள தீவுகட்கு அஞ்சல் எடுத்துச் செல்ல வானவூர்திகளே பெரிதும் பயன்படுகின்றன. இவ்வூர்திகளே பசிபிக் பெருங்கடலின் பல துறைகளுக்கும் பறந்து சென்று, செய்திகளைப் பரப்பப் பேருதவி புரிகின்றன; வட அமெரிக்காவுக்கும் ஐரோப்பாவில் பல இடங்கட்கும் சென்று திரும்புகின்றன.

ஆஸ்திரேலியாவின் துறைமுகங்களில் தொலைபேசி (டெலிபோன்), கம்பியில்லாத் தந்தி முதலியன அடங்கிய அஞ்சல் நிலையங்கள் உள்ளன. இவ்வஞ்சல் நிலையங்களினின்று வானவூர்தி வழியாக வெளிநாடுகட்குச் செய்திகள் நாடோறும் அனுப்பப்படுகின்றன.

**கப்பல்**

ஆஸ்திரேலியாவில் வாணிகத் துறைக்கும் போக்கு வரவுக்கும் கப்பல்கள் பெரிதும் உதவுகின்றன. வெளி நாட்டுக்குச் செல்லும் கப்பல்கள் வேறாகவும், உள்நாட்டுக் கப்பல்கள் வேறாகவும் இருக்கின்றன. உள்நாட்டுக் கப்பல்கள் வெளிநாடுகட்குச் செல்லமாட்டா. வெளிநாட்டுக்குச் செல்பவை உள்நாட்டில் செல்லமாட்டா. ஆஸ்திரேலியாவுக்கும் பிரான்ஸ், ஹாலந்து, பிரிட்டன், அமெரிக்கா முதலிய நாடுகட்கும் நடக்கும்

ஏற்றுமதி வாணிகம், கப்பல்கள் மூலமே நடை பெறுகின்றது. இக்கப்பல்கள் பிரயாணிகளை ஏற்றுவனவும், தபால் கொண்டு செல்வனவும், சரக்குகளைக் கொண்டு செல்வனவும் என்று மூவகைப்படும். இவை மூன்றாலும் ஆஸ்திரேலிய அரசாங்கத்திற்கு நிறைந்த வருவாய் உண்டெனக் கூறுதல் பொய்யாகாது.

# 7. தொழிலும் வாணிகமும்

## மேய்ச்சல் தொழில்

ஆஸ்திரேலியா நாட்டு வருவாயில் நூற்றுக்கு முப்பத்தெட்டுப் பங்கு, மேய்ச்சல் தொழிலைச் சார்ந்த பால் பண்ணை முதலிய தொழில்களால் கிடைக்கிறது. ஆஸ்திரேலியாவில் சமவெளிகள் நிறைந்திருக்கின்றன. அதனால் அவை மேய்ச்சல் தொழிலுக்குப் பொருத்தமாக அமைந்துள்ளன. சமவெளிகளில் கோடிக்கணக்கான ஆடுகள் மேய்கின்றன. அவை நூற்றுக்கணக்கான மைல் அளவு மேயும் வாய்ப்பினைப் பெற்றுள்ளன. சமவெளிகளில் போக்கு வரவு முறைகளும் எளிதாக அமைந்துள்ளன. இலட்சக் கணக்கான குதிரைகள் அங்குச் செல்வமாக அமைந்துள்ளன.

## கம்பள ஆடுகள்

ஆஸ்திரேலிய ஆடுகள் உலகிலுள்ள ஆடுகளுள் ஆறில் ஒரு பங்காகும். உலகில் கிடைக்கும் கம்பளத்தில் நாலில் ஒரு பங்கு ஆஸ்திரேலியாவில் கிடைக்கின்றது. அங்கு ஏறத்தாழ நூறு கம்பள ஆலைகள் வேலைசெய்கின்றன. கம்பள ஏற்றுமதியால் ஆண்டுதோறும் ஏறக்குறைய இரண்டு கோடிப் பவுன் ஆஸ்திரேலியாவுக்குக் கிடைக்கின்றது.

## பால் பண்ணைத் தொழில்

ஆடுகளைப் போலவே மாடுகளும் ஆஸ்திரேலியாவின் இயற்கைச் செல்வமாகும். அரசாங்கம் மாடுகளை விஞ்ஞான முறையில் பாதுகாத்துப் பால் கறப்பதிலும் வெண்ணெய் முதலிய பொருள்களை வெளிநாடுகட்கு அனுப்புவதிலும் கருத்துச் செலுத்துகின்றது. பால் பண்ணைகளில் பால் கறக்கும் கருவிகள் பயன்படுகின்றன. பாலிலிருந்து கிளாக்ஸோ ஓவல்டின் முதலிய பொருள்களைச் செய்யும் தொழிற்சாலைகள் பல உள. மாட்டுப் பண்ணைகளில் பன்றி, கோழி, தேனீ ஆகியவற்றின் வளர்ப்பு முறைகளும் கவனிக்கப்படுகின்றன முட்டை விற்பனைத் தொழில் சிறப்பாக நடைபெறுகின்றது. முட்டையின் வெள்ளைக் கருவையும் மஞ்சட் கருவையும் பிரிக்கும் இயந்திரங்கள் இருக்கின்றன. முட்டையின் சத்துப் பொருள்கள் புட்டிகளில் அடைக்கப்பட்டு வெளிநாடுகட்கு ஏற்றப்படுகின்றன.

## உழவுத் தொழில்

கம்பள ஆடு மேய்த்தல், பண்ணை மாடு மேய்த்தல் ஆகிய இரு தொழில்களுக்கும் அடுத்த மூன்றுவது தொழிலாகவே உழவு இருந்து வருகிறது. உழவைப் பற்றிய விவரங்களை அறியக் கல்வித் திட்டமும் ஆராய்ச்சித்துறையும் ஆஸ்திரேலியாவில் உருவாக்கப்பட்டுள்ளன. அரசாங்க உழவுப் பண்ணைகளும் இத்தொழிலைப் பெருக்கி வருகின்றன. வயலுக்குரிய பாஸ்பேட் உரங்களைப் பாறை

களிலிருந்து எடுக்க நூறு ஆலைகள் தோன்றியுள்ளன. இவ்வுரங்களின் உதவியால் கோதுமை, ஓட்ஸ், பார்லி, நெல், பலவகைக் கிழங்குகள் முதலியன நன்கு பயிராகின்றன. நிலத்தைப் பண்படுத்தவும், விதை விதைக்கவும், உரம் தூவவும், நீர் பாய்ச்சவும், அறுவடை செய்யவும் இயந்திரங்களே பயன்படுத்தப்படுகின்றன. ஆஸ்திரேலிய உயர்நிலைப் பள்ளிகளில் உழவு ஒரு பாடமாகக் கற்பிக்கப்படுகின்றது. உழவுக் கல்லூரிகளில் விஞ்ஞான முறைப்படி அமைந்த உழவு முறைகள் கற்பிக்கப்படுகின்றன.

### கரும்பும் பருத்தியும்

உழவர் விஞ்ஞான முறையைப் பயன்படுத்திக் கரும்பையும் பருத்தியையும் பயிராக்குகின்றனர். இதன்பயனாய்ப் பல கரும்பாலைகளும் பஞ்சாலைகளும் அங்குத் தோன்றியுள்ளன. சர்க்கரைத் தொழில் ஆஸ்திரேலியாவின் சிறந்த தொழில்களுள் ஒன்றாகும். சர்க்கரைத் தொழிற்சாலைகள் பல அங்கு வேலை செய்கின்றன. வெள்ளைச் சர்க்கரை ஆண்டுதோறும் வெளிநாடுகட்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றது. கரும்பை வெட்டும் இயந்திரக் கலப்பை கரும்பினை இருபுறங்களிலும் வெட்டி ஒன்று சேர்த்துக் கட்டுக்களாகக் கட்டும் காட்சியைச் சர்க்கரைத் தொழிற்சாலை ஒன்றில் கண்டு நான் வியப்படைந்தேன்.

**பழவகைகள்**

ஆஸ்திரேலியாவில் ஆப்பிள், ஆரஞ்சு, எலு மிச்சை, கொடிமுந்திரிப்பழம் என்பன மிகுதி யாகப் பயிராகின்றன. இவை இன்று எல்லா நாடு கட்கும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. பழங் களைக் கொண்டு ஜாம் (Jam) என்னும் இனிப்புப் பொருள் செய்யப்படுகின்றது.

**சுரங்கத் தொழில்**

ஆஸ்திரேலியா பொன் சுரங்கங்கள் மிகுந்த நாடாகும். இச்சுரங்கங்களில் ஏறத்தாழ முப்ப தாயிரம் தொழிலாளர் வேலை பார்க்கின்றனர். வெள்ளிச் சுரங்கங்களும், ஈயச் சுரங்கங்களும் இருக்கின்றன. துத்தநாகமும் அங்குக் கிடைக்கின் றது. மேலும் வெள்ளியும் ஈயமும் கலந்த உலோ கப் பொருளை வெட்டியெடுத்து விஞ்ஞான முறை களால் அதிலிருந்து துத்தநாகம் பிரித்தெடுக்கப் படுகின்றது. இவ்வாறே தகரமும் எடுக்கப்படு கின்றது; செம்பு மிகுதியாக வெட்டி எடுக்கப்படு கின்றது. ஆஸ்திரேலிய இரும்பு உள்நாட்டு வேலைகட்கே பயன்படுத்தப்படுகின்றது. அங்கு மூன்று வகையான நிலக்கரி கிடைக்கின்றது. ஆஸ்திரேலியர் தமக்குத் தேவையான நிலக்கரியை பயன்படுத்திக்கொண்டு எஞ்சியதை வெளிநாடு கட்கு ஏற்றுமதி செய்கின்றனர். பல துறைமுக நகரங்களில் உலோக உருக்குத் தொழிற்சாலை கள் நிறுவப்பட்டுள்ளன. இவர்கள் அவற்றைச்

சூழ்ந்துள்ள இடங்களில் கிடைக்கும் உலோகங்களைத் திரட்டி உருக்கி, உழவுக் கருவிகளையும் பிற இயந்திரக் கருவிகளையும் செய்கின்றனர். இங்குக் கிடைக்கும் இரும்பு, எஃகு உலோகங்கள் பொறியியற் கருவிகளும், போக்குவரவுக் கருவிகளும், இருப்புப் பாதைகளும் (தண்டவாளம்) செய்வதற்குப் பயன்படுகின்றன.

**காட்டுப் பண்ணைத் தொழில்**

ஒரு கோடி எழுபது லட்சம் ஏக்கர் பரப்புள்ள காடுகள் அரசாங்கத்தின் கண்காணிப்பில் இருந்து வருகின்றன, சவுக்கு மரக்காடுகள் ஆஸ்திரேலியாவில் மிகுதியாக உள்ளன. பைன், சைப்பிரஸ், யூக்லிப்டஸ், சந்தனம் முதலிய மரங்கள் காடுகளில் செழித்து வளருகின்றன; ஒன்றரை லட்சம் பவுன் மதிப்புள்ள யூக்லிப்டஸ் தைலம் ஆண்டு தோறும் வெளி நாடுகட்கு அனுப்பப்படுகிறது. சந்தனக் கட்டைகள் சீனம் முதலிய நாடுகட்கு ஏற்றுமதியாகின்றன. அரசாங்கத்தார் விஞ்ஞான முறையில் காடுகளை வளர்க்க முற்பட்டுள்ளனர், இக்காட்டுப் பண்ணைத் தொழிலால் ஏறக்குறைய இரண்டு கோடி மக்கள் கவலையின்றி வாழ வழியுண்டு என்று அரசாங்க அதிகாரிகள் என்னிடம் கூறினர்.

**மீன் பண்ணைத் தொழில்**

ஆஸ்திரேலியாவைச் சேர்ந்த கடற்பகுதிகளிலும் உள்நாட்டு நீர்நிலைகளிலும் வாழும் மீன்களைப்

பிடித்து உள்நாட்டில் விற்றும், வெளிநாடுகட்கு அனுப்பியும் மீன் பண்ணைத் தொழில் வளர்க்கப் படுகின்றது. அரசாங்கம் மீன் ஆராய்ச்சிக் குழுவை ஏற்படுத்தியுள்ளது, முத்துச் சிப்பி வளர்த்தலும் மீன் பண்ணையில் மற்றோர் துணைத் தொழிலாக அமைந்துள்ளது. ஏறத்தாழ இரு நூற்றைம்பது தோணிகள் இதற்காகக் கட்டப்பட்டுள்ளன. இரண்டாயிரம் பரதவர் இத்தொழிலில் ஈடுபட்டுள்ளனர். மீன்களைப் பிடித்துத் தகர டப்பிகளில் பக்குவம் செய்து வெளிநாடுகட்கு ஏற்றுமதி செய்தல் ஆஸ்திரேலியாத் தொழில்களுள் ஒன்றாகும்.

**தொழில் வளம்**

ஆஸ்திரேலியாவில் கிடைக்கும் மூலப்பொருள்களைக் கொண்டு அந்நாட்டில் பல தொழில்கள் செய்யப்படுகின்றன. மேய்ச்சல் தொழிலின் பயனாகக் கம்பளம் நெய்தல், பனியால் உறையச் செய்து புலாலைப் பதப்படுத்தல், செருப்புச் செய்தல், சோப்பும் மெழுகும் செய்தல் முதலிய தொழில்களை செய்கின்ற இயந்திர நிலையங்கள் ஏற்பட்டிருக்கின்றன. உழவுத் தொழிலின் பயனாக மாவரைத்தல், கருப்பஞ்சாறு வடித்தல், சர்க்கரை செய்தல், பலவகை ரொட்டி செய்தல் முதலிய தொழில்கள் பெருகி வருகின்றன. பால் பண்ணைத் தொழிலின் பயனாக வெண்ணெய், பாலடைக் கட்டி முதலிய பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்கள் வளர்ந்து வருகின்றன. காட்டுத் தொழிலின் பயனாக

மரச் சாமான்கள் செய்யும் தொழில்களும், சுரங்கத்தொழிலின் பயனுக இரும்பு, எஃகு பொறியியற் கருவிகள், மின்சார விளக்குகள் முதலியன செய்யும்தொழில்களும் வளர்ச்சி அடைந்துள்ளன.

ஆஸ்திரேலியாவின் இயந்திரத் தொழில்கள் பெரும்பாலும் உள்நாட்டு நன்மைக்காகவே நடைபெறுகின்றன. அத்தொழிலால் பெறப்படும் பொருள்களுள் ஒரு பகுதியினவே வெளிநாடுகட்கு ஏற்றுமதியாகின்றன; எஞ்சிய பொருள்கள் அனைத்தும் உள்நாட்டிலேயே செலவழிகின்றன. இம்முறையினுல் உணவு, உடை, மின்சார வசதி முதலியன ஒவ்வொரு நாளும் மக்கள் வாழ்வில் மிகுதியாகப் பயன்படுகின்றன.

## இறக்குமதிப் பொருள்கள்

ஆஸ்திரேலியாவிலிருந்து பிறநாடுகட்கு ஏற்றுமதியாகும் பொருள்கள் இன்னவை என்று முன் பக்கங்களில் ஆங்காங்குக் குறிக்கப்பட்டன. பிற நாடுகளிலிருந்து அங்கு இறக்குமதியாகும் பொருள்களைக் கீழே குறிப்பிடுகின்றேன். அமெரிக்காவிலிருந்து இயந்திரங்களும், காகிதங்களும், இரசாயனப் பொருள்களும், குடிவகைகளும் இறக்குமதியாகின்றன. ஜப்பானிலிருந்து பட்டுத் துணிகளும் சிலவகை இயந்திரங்களும் இறக்குமதி செய்யப்படுகின்றன. ஜர்மனியிலிருந்து பலவகை இரசாயனப் பொருள்கள் வருகின்றன. காகிதம், மோட்டார்ப் பொருள்கள் முதலியன கானடாவிலிருந்து வருகின்றன.

### செல்வ நிலை

ஆஸ்திரேலியாவின் வளர்ச்சிக்கு அவ்வப் போது தேவைப்பட்ட பொருளைப் பிரிட்டிஷ் அரசாங்கம் உதவி வந்தது; இன்றும் உதவி வருகிறது. இக்கடன் தொகைகளைக் கொண்டு ஆஸ்திரேலிய நடு அரசாங்கம் போக்குவரவு, நீர்த்தேக்கத் திட்டம், புதிய குடியிருப்புத்திட்டம், நாட்டுப் பாதுகாப்புத் திட்டம் முதலியவற்றைச் செய்து வருகின்றது.

### நாணயங்கள்

நாணயங்களை அச்சிட்டு வெளியிடும் தொழிலகங்கள் ஆஸ்திரேலியாவில் மெல்பர்ன், பெர்த் என்னும் நகரங்களில் அமைந்திருக்கின்றன. செம்பு, வெள்ளி, பொன் நாணயங்கள் அச்சிடப் படுகின்றன.

### வங்கித் தொழில்

வங்கித் தொழில் (Banking) நாட்டு வருவாய்க்குப் பெரும்பயன் அளிப்பதாகும். பிரிட்டிஷ் காமன் வெல்த்தைச் சார்ந்த வங்கிகள் (Banks) ஆஸ்திரேலியாவில் நிறுவப்பட்டுள்ளன. இவை கொடுக்கல் வாங்கல் நிமித்தமாக அமைக்கப்பட்டவையாகும். ஆஸ்திரேலியாவுக்குச் சொந்தமான பொருள் சேமிப்பு வங்கிகளும் இருக்கின்றன. இவையன்றிச் சிற்றூர்களில் உழவுப் பண்ணை வங்கிகளும் ஏற்பட்

டுள்ளன. இவை சிற்றூர் மக்களுக்கும், குடியேறும் புதியவர்க்கும் கடன்கொடுத்து உதவுகின்றன.

### தொழிலாளர் இயக்கம்

உரிமைபெற்ற குடியேற்ற மக்களும், விடுதலை பெற்ற கைதிகளும் ஆஸ்திரேலியாவில் **தொழிலாளர் இயக்கம்** தோன்றுவதற்கு முதற்காரணமாவர். அவர்களிடமே முதன்முதலில் தொழிலாளர் இனவுணர்ச்சியும் ஒற்றுமையும் ஏற்பட்டன.

### தொழிற்கட்சியின் கொள்கைகள்

கி. பி. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் சில தொழிலாளர் தலைவர் தனிப்பட்ட முறையில் புதிய தென்வேல்ஸின் பாராளுமன்றத்தில் இடம்பெற முயன்றனர். அதன் பின்னர்ப் பொதுத்தேர்தலில் தொழிற் கட்சியினர் வெற்றிபெற்றனர். 125 உறுப்பினர் அடங்கிய பாராளுமன்றத்தில் 35 தொழிற்கட்சியினர் இடம் பெற்றமை சிறப்புக்குரியதன்றோ? கி. பி. 1794-இல் நடந்த பொதுத் தேர்தலிலும் தொழிற்கட்சி மிக்க வலிமைபெற்று உயர்ந்தது.

தொழிற்கட்சியின் இருபெருங் கொள்கைகள் இங்கே குறிப்பிடத் தக்கன. ஆஸ்திரேலியாவிலுள்ள பிற கட்சிகளிடமிருந்து விலகியிருப்பது அக்கொள்கைகளுள் ஒன்றாகும்; தொழிற்கட்சி அமைப்பை நடத்தும் ஓர் ஆய்வுக் குழுவை ஒழுங்காகச் செயலாற்றுவதுமற்றொருகொள்கையாகும். இவ்விரண்டையும் செவ்வனே நிறைவேற்றியதால்

தொழிற்கட்சி வளர்ச்சியுற்றது; கட்டுப்பாடுக ளுடன் வெற்றிபெற்றது. தொழிற் கட்சி ஆட்சி யாளரை ஆதரிக்கத் தவறவில்லை. ஆயினும் ஆட்சி யாளர் தொழிற்கட்சித் திட்டங்களை நிறைவேற்று வதைக் கண்ணுங் கருத்துமாகப்பார்த்துஆராய்ந்த பின்னரே ஆட்சியாளர்க்குத் தொழிற்கட்சி முழு ஆதரவும் காட்ட முன்வந்தது.

## சட்டசபையில் தொழிற்கட்சி

காலப்போக்கில் ஆஸ்திரேலியாவின் எல்லா மாநிலங்களிலும் தொழிற்கட்சி வலிமைபெற்ற கட்சியாகத் திகழ்ந்தது. நடு அரசாங்கம் ஏற்பட்ட போது ஆட்சி மன்றங்களில் மூன்றிலொரு பங்கு வலிமைபெற்ற தொழிற்கட்சி அமைந்தது.

ஆஸ்திரேலியாவில் ஒவ்வொரு சிறு தொழி லின் வளர்ச்சிக்கும் அரும்பாடுபட்டு உழைத்து அதன் குறைபாடுகளை ஆட்சியாளரிடம் முறை யிட்டு நீக்கிய பெருமை தொழிற்கட்சியையே சாரும். தொழிற்கட்சி அரசாங்கம் பல ஆண்டுகள் ஆஸ்திரேலியாவில் ஆட்சி புரிந்தது என்பது குறிப் பிடத் தகுந்தது.

## தொழிலாளர் வாழ்க்கை

தொழிலாளர் நலனுக்காக அரசாங்கம் பல சட்டங்களை இயற்றியுள்ளது. இன்று ஆஸ்திரேலி யாவில் தொழிலாளர் யாவரும் நலம்பெற்று வாழ் கின்றனர். மிகக் குறைந்த சம்பளம்பெறும் தொழி லாளரை அங்குக் காண்பதரிது. தோட்டத் தொழி

லாளர் மாதச் சம்பளம் அறுபது ரூபாயும், பழங்களைப் பறிக்கும் தொழிலாளர் ஐம்பது ரூபாயும் பெறுகின்றனர். ஆஸ்திரேலியாவின் தொழிலாளர் வீட்டு வசதிபெற்று வாழ்கின்றனர். ஆங்காங்கே நகராண்மைக்கழகங்கள் வீடுகட்டும் திட்டங்களைக் கொண்டு தொழிலாளர்க்குப் பல வீடுகளைக் கட்டித் தருகின்றன. உழவர், தொழிலாளர் ஆகியோர்க்குப் பொது அறிவை வளர்ப்பதற்காகப் பல வார இதழ்களும், திங்களிதழ்களும் வெளியிடப்படுகின்றன.

# 8. நாட்டுப் பாதுகாப்பு

## படைகளின் தோற்றம்

கி. பி. 1870-இல் ஆஸ்திரேலியாவில் நாட்டுப் பற்று வளர்ந்தது; ஆஸ்திரேலியாவுக்குரிய படைகளை நிறுவவேண்டுமென்ற கிளர்ச்சி எழுந்தது. அப்போது பிரிட்டிஷ் துருப்புகள் ஆஸ்திரேலியாவை விட்டு வெளியேறின. கி. பி. 1899 முதல் கி.பி. 1902 வரை நடந்த போயர் சண்டையில் (Boer War) ஆஸ்திரேலியப் படைகள் கலந்து கொண்டு போரிட்டன. அதன் பின்னர், ஆஸ்திரேலியக் கூட்டாட்சி அமைக்கப்பட்டவுடன் நாட்டுப் படைகளை உருவாக்கி வளர்க்கவேண்டுமென்று ஆட்சியாளர் பெருமுயற்சி கொண்டனர்; கி. பி. 1903-இல் பதினெட்டு வயது முதல் அறுபது வயது வரை உள்ளவர்கட்குப் படைப் பயிற்சி அளிப்பது என்ற சட்டத்தை நிறைவேற்றினர்; கி. பி. 1909-இல் கிட்சனர் என்னும் அறிஞரது அறிவுரைக்கேற்பப் பல படைப் பயிற்சி நிலையங்களை உண்டாக்கினர். முதல் உலகப் போரில் ஏறக்குறைய நான்கு லட்சம் ஆஸ்திரேலிய வீரர்கள் கலந்து கொண்டனர்; அவர்களுள் ஏறக்குறைய மூன்று லட்சம் வீரர்கள் வெளிநாடுகட்குச் சென்றனர். அதன் பின்னரும் ஏற்பட்ட பற்பல படை மாட்சி

யுடன் இன்று ஆஸ்திரேலியப் படை நிகரற்று விளங்(

## இந்நாளில் ஆஸ்திரேலியப் படை

இன்று ஆஸ்திரேலியப் படை **நிலைப் படை** (Permanent Force) எனவும், **தற்காலிகப் படை** (Citizen Force or Military) எனவும் இரண்டு பிரிவுகளாகத் திகழ்கிறது. தற்காலிகப் படையில் பதினெட்டு வயது முதல் நாற்பது வயதுவரை உள்ளவர் சேர்ந்து மூன்றாண்டுகள் பயிற்சி பெறல் வேண்டும். தாமாக விரும்புவோரே நிலைப் படையில் சேர்வர்; அப்படையில் ஐந்தாண்டுகள் அவர்களுக்குப் பயிற்சி அளிக்கப்படுகின்றது.

## படைவலியும் படையமைப்பும்

நிலைப்படையில் கடற்கரைப் பாதுகாப்புப் படையும் (Costal Defense), வானவூர்தி எதிர்ப்புப் படையும் (Anty Aircraft Units), நில அளவுப் படையும் (Survey Corps), படையுதவிப் படையும், (Army Service Corps), மருத்துவ உதவிப் படையும் (Army Medical Corps) பல கிளைகளாக இணைக்கப்பெற்றுள்ளன. தற்காலிகப் படை, அமைதியை நிலைநாட்டும் பெரும் பணியையே மேற்கொண்டுள்ளது. அது செய்தி பரப்புதலையும், கடற்கரைப் படைகளுக்கு உதவியையும் செய்துவருகின்றது.

ஆஸ்திரேலியாவில் வடக்குப் படை, கிழக்குப் படை, தெற்குப்படை, மேற்குப்படை என நான்கு

படைப் பிரிவுகள் இருக்கின்றன. இந்நான்குடன் டார்வின் துறைமுகத்தின் தனிப்பெரும் படை ஒன்றும் சேர்ந்து செயலாற்றுகின்றது. இவ்வாறு படைத் தலைமையிடங்கள் ஐந்து அமைந்திருக்கின்றன. படை பாதுகாப்புக் குழுவொன்று (Council of Defense) எல்லாப் படைகளையும் மேற்பார்த்து ஆணைசெலுத்துகின்றது. இக்குழுவில் முதலமைச்சர், பொருளாளர், வெளிநாட்டுறவு அமைச்சர், பாதுகாப்பு அமைச்சர், மூன்று படைத்தலைவர் ஆகியோர் உறுப்பினராக உள்ளனர். மேலும் ஆஸ்திரேலியாவில் ஒரு படைக்குழுவும் (Military Board) அமைந்திருக்கிறது. இதில் பாதுகாப்பு அமைச்சரும், தலைமைப் படைப் பயிற்சியாசிரியரும், சில படைத்தலைவர்களும், நாட்டுச் செல்வ நிலை உறுப்பினரும், அதன் செயலாளரும் உறுப்பினராக விளங்குகின்றனர்.

### போர்டு முறைக் கல்வி

ஆஸ்திரேலியாவில் பாடிங்டன் (Podington) என்னும் நகரில் போர்ப் பயிற்சிக்கூடம் (Military College) ஒன்று நிறுவப்பட்டுள்ளது. அங்கு நான்காண்டுக் கல்வி கற்பிக்கப்படுகிறது. அக்கல்விபெறுவோர் நிலைப்படையில் வீரர்களாகச் சேர்கின்றனர். நான்காண்டுக் கல்வியின் பின்னர் ஓராண்டு பிரிட்டன் அல்லது இந்தியாவுக்குப் போர்ப் பயிற்சியின் மேற்கல்விக்கு அரசாங்கம் அவர்களை அனுப்புகின்றது. சிட்னியில் ஒ துப்பாக்கிப் பயிற்சிக்கூடமும் (School of Artillery)

கிராண்ட்விச்சில் மற்றொரு சிறுபடைக்கலப் பயிற்சிக்கூடமும் (Small Arms School), மெல் பர்னில் இன்னும் ஒரு படையுதவிப் பயிற் சிக் கூடமும் (Army Service Corps Training School) ஏற்பட்டிருக்கின்றன. இவ்வெல்லாப் பயிற்சிக் கூடங்கட்கும் பொதுவான ஒரு நடு அலுவற்கூடமும் ஆஸ்திரேலியாவில் படைப் பயிற் சியை ஒழுங்குபெற நடத்தி வருகின்றது. இவ் வாறு ஆஸ்திரேலியாவில் போர்முறைக் கல்வி கற்பிக்கப்படுவதால் அந்நாடு வீரஞ் செறிந்த நாடாகத் திகழ்கின்றது.

**வானவூர்திப் படை**

ஆஸ்திரேலியாவின் வானவூர்திப் படை அந் நாட்டுப் படைநிலையுடன் இணைக்கப்பெற்றிலது; வானவூர்திப் படைக் குழுவின் (Air Board) பார் வையில் இயங்குகிறது; அக்குழுவில் ஆஸ்திரேலிய அமைச்சரும் இலண்டன் வானவூர்தி அமைச்சுக் குழுவின் உறுப்பினரும் பணியாற்றுகின்றனர். மேலும் இக்குழுவில் வானவூர்திப் படைத்தலைவர் மூவரும், செல்வநிலை அமைச்சுக் குழுவினரும் இடம் பெறுகின்றனர். இப்போது ஆஸ்திரேலி யாவின் வானவூர்திப் படையில் மூவாயிரத்திற்கு மிகுதியான வீரர் அடங்கியுள்ளனர்.

**கப்பற் படை**

பத்தொன்பதாம் நூற்றாண்டிற்கு முன்னர் ஆஸ்திரேலியாவில் நிலையான கப்பற்படை ஏற்பட

வில்லை. ஆஸ்திரேலிய அரசாங்கம் கி. பி. 1903-இல் ஒரு கப்பற்படையை நிறுவியது. அதற்கடுத்த சில ஆண்டுகளில் போர்க்கப்பல்கள் வெளி நாடுகளினின்று ஆஸ்திரேலியாவில் வந்திறங்கின. 'ஆஸ்திரேலியா', 'சிட்னி', 'மெல்பர்ன்' எனப் பெயர்பெற்ற மூன்று போர்க் கப்பல்கள் பெருமிதத்துடன் ஆஸ்திரேலியத் துறைகளைச் சுற்றி வட்டமிடத் தொடங்கின. முதல் உலகப் போரில் ஆஸ்திரேலியாவின் இரண்டு நீர்மூழ்கிக் கப்பல்கள் முதன் முதலில் ஜெர்மன் பசிபிக் இணைப்பு நாடுகளைக் கைப்பற்ற அனுப்பப்பட்டன என்று ஆஸ்திரேலிய வரலாறு தெரிவிக்கின்றது. சிட்னியே ஆஸ்திரேலியாவின் பெரிய கப்பற்படைத் தளமாகும். பிலிண்டர்ஸ் (Flinders), கீலாங் (Geelong) ஆகிய இடங்களில் இரண்டு கப்பற்படைப் பயிற்சிக்கூடங்கள் உள்ளன.

# 9. பழங்குடிகள்

**உடலமைப்பு**

ஆஸ்திரேலியப் பழங்குடி மக்கள் தோற்றத்திலும், பண்பாட்டிலும் பிறநாட்டுப் பண்டைக் குடிகளிலிருந்து வேறுபட்டவராவர். இம்மக்கள் பழுப்பு நிறமும், நடுத்தர உயரமும், குறுகிய தலையும், பின்சாய்ந்த நெற்றியும், பருத்த புருவ எலும்பு முகடும் உடையவர்; அகன்ற மூக்கும், பள்ளமான மூக்கடியும், புறமாக நீண்ட தாடையும் அகன்ற வாயும் கரிய முடியும் பெற்றவர். இம் மக்கள் தென்னிந்தியாவிலுள்ள மலைச்சாதியாரையும், இலங்கையிலுள்ள வேடரையும், மலேயா முதலிய கிழக்குப் பகுதிகளிலுள்ள ஆஸ்திரலாயிடுகளைப் போன்ற சில குழுக்களையும் சேர்ந்தவர் என்று ஆராய்ச்சியாளர் கூறுவர்.

**கருவிகள்**

இவர்கள் ஈட்டி, வேல், வளைதடி, கேடகம், கற்கோடரி, கற்கத்தி, வலை, கூடை முதலியவற்றைக் கொண்டு காட்டில் உணவு தேடியும் விலங்குகளையும், பறவைகளையும் வேட்டையாடியும் வாழ்ந்து வருகின்றனர்.

**உடையும் தொழிலும்**

இம்மக்கள் வறுமையிலும் அறியாமையிலும் மூழ்கி இருக்கின்றனர்; மூட நம்பிக்கைமிகுந்தவர்;

ஆயின், அமைதியை விரும்புபவர். இவர்களுள் பலர் உடையின்றியே வாழ்பவர்; சிலர் தம் மானத்தைக் காக்க ஒரு சிறு துணியை மட்டுமே உடுப்பவர். இவர்கள் எருமை வேட்டையில் விருப்பம் உடையவர்; அம்பு எய்வதில் பேராற்றல் படைத்தவர்; தம் உடல் உறுப்புக்களுக்குச் செந்நிறம் தீட்டுபவர்; கிளிஞ்சல்களைச் சேர்த்து மாலையாக அணிவதில் மிகுந்த விருப்பம் உடையவர். இம் மக்களில் சிலர் குதிரைகளைப் பயன்படுத்துகின்றனர்.

### அலையும் குடிகள்

இப்பழங்குடிகள் தம்முள் போர் நிகழ்த்தல் உண்டு. அப்பொழுது ஒரு குறிப்பிட்ட அடையாளம் பொறித்த விலங்கு அல்லது செடி இவர்தம் அடையாளமாக விளங்குமாம். நல்ல பருவகாலம் என இவர்கள் எண்ணிய காலத்தில் இந்த அடையாளத்தைப் பொருத்தி மகிழ்கின்றனர். இவர்களிடம் உழவுத் தொழில் காணப்படவில்லை. இவர்கள் நாய்களைப் பழக்கும் முறையைத் தெரிந்துகொண்டிருக்கிறார்கள். ஓரிடத்தில் நிலையாக வீடு அமைத்து வாழும் வாழ்க்கையை இவர்கள் அறியவில்லை. இவர்கள் வேட்டையாடுபவராகவும், மீன் பிடிப்பவராகவும், உணவு தேடுபவராகவும் வாழ்கின்றனர். இவர்கள் பல்லுயிர்களின் பழக்க வழக்கங்களை அறிந்தவராகவும், மரஞ் செடிகளின் வளர்ச்சி முறையைத் தெரிந்தவராகவும் இருந்து வருகின்றனர். ஒவ்வொரு நாளும்

இவர்கள் பயன்படுத்தும் போர்க் கருவிகளையே தட்டியெழுப்பி இசைக் கருவிகளாக மாற்றுகின் றனர். அப்பொழுது கடற் சிப்பிகளும் ஒலியெழுப் பப் பயன்படுகின்றன; இவர்கள் ஓவியக் கலையில் திறமை அற்றவர்கள்; சில வண்ணங்களையே அறிந்துள்ளனர். இவர்கள் வரையும் படம் சிறப் பாக நேர்க் கோடாகவே இருக்கும்.

## குடியமைப்பு

ஒவ்வொரு பழங்குடியும் தனக்குரிய இடமும் மொழியும் பெற்றுள்ளது. குடித் தலைவனே ஆணை செலுத்துவோனாக விளங்குகின்றான். ஒவ்வொரு பழங்குடியும் சிறுசிறு குழுக்களாகப் பிரிக்கப்பட் டிருக்கிறது. குழுத் தலைவரும் குடித் தலைவரைப் போலவே மரபு வழியைப் பின்பற்றியே தலைமை ஏற்கின்றனர். பழங்குடியிலுள்ள முதியவர்கள் மந்திரங்கள் செய்வதில் தேர்ச்சி பெற்றுள்ளனர். பழங்குடி ஒவ்வொன்றும் ஏதேனும் ஒரு செடி யையோ விலங்கையோ தனக்குரிய அடையாள மாகக் கொண்டிருக்கிறது. தங்கள் அடையாளத் தைக் காப்பதில் இப்பழங்குடிகள் கண்ணும் கருத் துமாக இருக்கின்றனர்.

## திருமண முறை

இரத்தக் கலப்புள்ள ஆண்மகனையும் பெண் மகளையும் வாழ்க்கையில் ஒருவர்க்கொருவர் துணை யாக இருக்குமாறு திருமணம் முடிப்பதே இப்பழங்

குடிகளின் நோக்கமாகும். இரத்தக் கலப்பற்ற முறையில் இவர்கள் பெண் கொடுப்பதும் கொள் வதும் இல்லை. இவ்வாறு நடைபெறும் திருமண முறை பொதுப்படையாக இருவகைப்படும். தாய் வழி மாமனையும், அண்ணன் முறையில் வரும் ஆண்மகனையும் மணம் முடித்தல் இவர்களது வழக்கமாகும்.

**சமயநிலை**

ஒவ்வொரு மனிதனும் முன் வினைப் பயனால் பழைய பிறவியில் இருந்த ஒரு மனிதனின் புதுப் பிறப்பாகப் பிறக்கிறான் என்று ஆஸ்தி ரேலியக் குடிமக்கள் நம்புகின்றனர். குடிகளுக்கு எல்லாம் முன்னோன் ஒருவன், பழங்குடி அடை யாளமிட்ட விலங்கினை ஒத்திருப்பான் என்பதும் இவர்களின் துணிபாகும். இவர்களிடையே பல வகை விழாக்கள் நடைபெறுகின்றன. பல்பிடுங் குதல், நெருப்பைச் சுற்றி ஆடுதல் என்பன அவற்றுள் சிலவாகும். உடல், உள்ளம் ஆகியவை பற்றிய மக்கள் இயல்புகளைத் தெரிவிக்கும் புரா ணங்களையும் இதிகாசங்களையும் இக்குடிகள் கேட்டு இன்புறுகின்றனர்; இவற்றுள் சொல்லப் பட்ட கதைகளை நம்பிப் புராணக் கடவுளரை வழி படுகின்றனர். படைத்தவன் ஒருவனே என்ற நம்பிக்கை இக்குடிகளிடையே இல்லை.

## வியத்தகு கருவி

இப்பண்டைக் குடிகள் பயன்படுத்தும் வளை தடிக்கு "**பூமிராங்**" என்பது பெயராம். இது மரத்தால் செய்யப்பட்டது; அழகிய வளைவுகளுடன் கூடியது; வளர்பிறை போன்ற அமைப்பை உடையது. பண்டைக் குடிகள் இதனை நன்றாகச் சுற்றி வீசி எறிவர். இவ்வாறு எறியப்பட்ட வளை தடி நெடுந்தொலை சென்று, பின்பு தன்னை எறிந்தவரிடமே வந்து சேர்ந்துவிடும். இவ்வளை தடிக்குரிய 'பூமிராங்' என்னும் பெயர், போரில் எதிரிகள் மீது குண்டுகளை வீசிப் புறப்பட்ட இடத்தை வந்தடையும் விமானங்கட்கு இடப்பட்டுள்ளது. இப் 'பூமிராங்' என்னும் சொல் வெள்ளை ஆஸ்திரேலியரது பேச்சு வழக்கில் உள்ளது. ஒருவர்க் கொருவர் ஒரு பொருளை இரவலாகக் கொடுக்கும் பொழுது, அப்பொருளை மீண்டும் தனக்குத் திருப்பித்தரல் வேண்டும் என்னும் கருத்தில், 'இது ஒரு பூமிராங் என்பது நினைவில் இருக்கட்டும்' என்று கூறுதல் வழக்கம். இங்ஙனம் இப்பழங்குடி மக்கள் கையாண்டு வரும் சொல், ஒரு வகை வானவூர்தியின் பெயராகவும் வெள்ளை ஆஸ்திரேலியர் பேச்சு வழக்கிலும் இருத்தல், இப்பழங்குடி மக்களின் நினைவை என்றும் நிலை பெறச் செய்வதாகும். நான் இக்கருவியையும் இம்மக்கள் பயன்படுத்திய வேறு கருவிகளையும் மெல்பர்ன் நகரப் பொருட் காட்சிச் சாலையில் கண்டேன்.

**நகரங்கள்**

இப்பழங்குடி மக்கள் சில நகரங்களுக்கு வைத்த பெயர்கள் ஆஸ்திரேலியாவில் இப்போதும் வழக்கில் உள்ளன. **கான்பரா** என்பதும் **டூவும்பா** என்பதும் அவ்வந் நகரங்களுக்குப் பழங்குடி மக்கள் வழங்கிய பெயர்களேயாம். கான்பரா என்னும் நகரம் ஒரு பள்ளத்தாக்கில் உள்ள இரண்டு உயரிய மலைகள் மீது அமைந்திருக்கிறது.

# 10. பலவகை உயிர்கள்

ஆஸ்திரேலியாவின் இயற்கையமைப்புக்குத் தக்கவாறு பலவகை உயிர்களும் மக்களும் வாழ்ந்து வருவதை நாம் காண்கிறோம். ஆஸ்திரேலியாவில் நானூறு வகை உயிரினங்கள் வாழ்கின்றனவாம். இங்குள்ள சிலவகை மண்புழுக்கள், தென்னுப் பிரிக்காவிலும் ஜப்பானிலும் வாழ்கின்றன. உயி ரின வளர்ச்சியில் ஆஸ்திரேலிய மண்புழுக்கள் மிகப் பழைய வடிவமுடையன. இங்குள்ள முதலை கள் ஆசியாவில் காணப்படும் முதலைகளைப் போலத் தோன்றுகின்றன. குவீன்ஸ்லாந்து முதலைகள் முப்பதடி நீளமுள்ளவை. 'ஓடும் பறவை' என் னும் ஓரினம் ஆஸ்திரேலியாவில் வாழ்கிறது. எமு, காசோவரி என்னும் ஓடும் பறவைகள் அங்குள் ளன; பல நிறக் கிளிகள் வாழ்கின்றன; 'கூக்கா பாரா' எனப்படும் சிரிக்கும் கழுதை இருக்கிறது; குரலை எதிரொலி செய்யும் 'லயர்' என்னும் பற வையும் அங்கு உண்டு. ஆஸ்திரேலியாவில் குதிரை கள் மிகுதியாக உண்டு. அவை நடு ஆஸ்திரேலியா வில் போக்கு வரவுக்குப் பெருந் துணைபுரிகின்றன. ஆஸ்திரேலியர் பேரன்புடன் நாய்களை வளர்க் கின்றனர். ஒருவரது நாய் சில மணி நேரம் காணப்படவில்லை யாயின், அதற்குரியவர் அது காணப்படவில்லை என்பதைச் செய்தித் தாள்களில்

வெளிப்படுத்தி விடுவர்; அது வந்து சேர்ந்தவுடன் அச்செய்தியையும் அந்தச் செய்தித் தாள்களில் வெளியாக்கிவிடுவர். ஆஸ்திரேலியர் சிறப்பாக ஆடு மாடுகளைத் தங்கள் உயிர்போலக் கருதிப் பாதுகாத்து வருகின்றனர். பாடும் பறவையான 'மினுரா' என்பதும், தேன் எடுத்துண்ணும் பறவையும் ஆஸ்திரேலியாவில் வாழ்கின்றன. மேலும் இங்குக் காட்டு நாய்களும் கங்காருகளும் சிறப்புடையன.

ஆஸ்திரேலியக் காடுகளில் பழங்காலத்து மரங்கள் வளர்ந்திருக்கின்றன. ஆங்காங்கே காட்டு மலர்களும், செடி கொடிகளும் பயிராகின்றன. சிலவகைச் செடிகளும் உயிரின வளர்ச்சியில் மிக்க தொன்மை வாய்ந்தவை. உயிரினங்களின் படங்கள் ஆஸ்திரேலியாவில் தபால் தலைகளில் அச்சிடப்படுகின்றன. இச் செயல் அவர்கள் தங்கள் நாட்டு உயிரினங்கள்மீது கொண்டுள்ள பற்றை நன்கு அறிவிப்பதாகுமன்றோ?

**எமு**

ஆஸ்திரேலியப் பறவைகளுள் சில உலகத்தின் வேறு எப்பகுதியிலும் கிடைப்பதில்லை. அவற்றுள் குறிக்கத் தக்கவை எமு, காசோவரி என்பன. எமு ஆஸ்திரேலியாவிலும் அதைச் சுற்றியுள்ள தீவுகளிலும் வாழும் பறவை. இது நெருப்புக் கோழிக்கு அடுத்த நிலையில் பிற எல்லாப் பறவைகளினும் பெரிதாக இருக்கின்றது. இது தென் கிழக்கு ஆஸ்திரேலியாவில் மிகுதியாகக் காணப்

படுகிறது. இதன் தலைமீதும் உடல் முழுவதும் நீண்ட இறகுகள் இருக்கின்றன. இதன் கட்டை விரலின் உட்பகுதியில் கூரிய நகமிருக்கின்றது. இப் பறவை பறக்கும் இயல்பினதன்று; நிலத்தின்மீது ஓடும் இயல்பினை உடையது. தரையில் அமைந்த பள்ளங்களே இதன் வாழ்விடங்களாகும். பழங்கள், கொட்டைகள், புல் பூண்டுகள் முதலியன இதன் உணவாகும். இவ்வினப் பறவைகள் சில சேர்ந்து கூட்டங் கூட்டமாக வாழும்; இதன் முட்டை நீல மும் பச்சையும் கலந்த நிறமுடையது. நான் இப் பறவையைச் சிட்னியை அடுத்த சிறு தீவிலுள்ள உயிர்க் காட்சி நிலையத்தில் கண்டு களித்தேன்.

**காசோவரி**

இது எமுவைவிடச் சிறிய உருவத்தை உடையது; காடுகளில் வாழ்வது. இதுவும் இறகுகளை உடையது. இதன் இறகுகள் கழுத்தையும் முதுகையும் மூடியிருக்கும். ஒரு மயிர்ச் சட்டை உடம்பு முழுமையும் போர்த்தாற் போல இதன் இறகுகள் நெருக்கமாகவும் நீண்டும் அமைந்திருக்கின்றன. இதன் கால்கள் உறுதி வாய்ந்தவை. இதன் கட்டை விரல்களில் நீளமும் உறுதியும் வாய்ந்த நகங்கள் உண்டு. இதன் உயரம் ஐந்தடியாகும். இதன் தலைமீது வீரர் தலையில் அணியும் எஃகுக் குல்லாய் போன்ற ஓரமைப்புக் காணப்படுகின்றது. இது கொட்டைகளையும், புல் பூண்டுகளையும் வேறு சில உயிர்களையும் தின்று உயிர்

வாழ்கிறது. இப்பறவை மிகவும் மானமுடையது. இது மிகுந்த வேகத்துடன் ஓடவல்லது; ஆதலால் எளிதில் பிடிக்கப்படுவதன்று. இதுவும் மேற் சொல்லப்பட்ட உயிர்க் காட்சி நிலையத்தில் எனக்குக் காட்சியளித்து என் இன்பத்தைப் பெருக்கியது.

**கங்காரு**

விலங்கினங்களுள் வியப்பிற்குரியது கங்காரு. இதுவும் ஆஸ்திரேலியாவைத்தவிர வேறு எந்நாட்டிலும் காணப்படாதது. இதன் முன் கால்களை விடப் பின் கால்கள் மிகவும் நீளமானவை. அதனால் இது தத்தித் தத்திச் செல்ல இயலுகிறது. இது ஒரே சமயத்தில் முப்பதடி தூரம் தாவ வல்லது. இதற்கு நீண்ட மயிரடர்ந்த வால் இருக்கிறது. இவ்விலங்கு புல்பூண்டுகளை உண்டு வாழ்வது. இது குவீன்ஸ்லாந்தில் மிகுதியாக இருக்கின்றது.

இதன் வயிற்றில் ஒரு பை உள்ளது. அப் பையில் இதன் குட்டி வளருகின்றது. நீண்டு முன்புறமுள்ள இதன் பற்கள் எளிதிலே புற் பூண்டுகளைக் கடிக்க உதவுகின்றன. இதன் தலை ஆட்டின் தலை போன்றது. இது எட்டடி உயரம் நிற்க வல்லது. இதன் வால் கூர்மையாகவும் கனமாகவும் உள்ளது. இது வேகமாக ஓடும்பொழுது இவ்வால் நிமிர்ந்திருக்கும். இது மெதுவாகத் தன் முன் கால்களால் நடக்கும்பொழுது இதன் வாலும் முன்காற் பகுதியும் இதற்கு உதவியாக இருக்கின்றன.

இதன் கண்கள் கறுத்தனவாகவும் பழுப்பு நிறத்தனவாகவும் இருக்கின்றன. இதன் வாய் சிறியது. அவ்வாய் இரண்டு உதடுகளாலும் ஓரளவு மூடப்பட்டுள்ளது. இதன் கண்கள் நாற்புறமும் காண வல்லவை. இதன் உடல்மீது அடர்ந்துள்ள மயிர் மென்மையாக இருக்கின்றது. இது ஒரு முறை ஒரு குட்டியையே ஈனும் இயல்புடையது.

இந்தக் கங்காரு இனத்துள் ஏறத்தாழ இருபது வகை உண்டு. உருவ அமைப்பிலும் பலவகை உண்டு. இவை அனைத்தும் ஆஸ்திரேலியாவிலும் அதைச் சுற்றியுள்ள தீவுகளிலும் உள்ள அடர்ந்த காடுகளில் வாழ்கின்றன. இவற்றுட் சில பகலில் பதுங்கியிருந்து இரவில் வெளிப்பட்டு இரை தேடுகின்றன. இவற்றுள் பழுப்பு நிறமுடையன சில. இவை பசும் புல் வெளிகளில் வாழ்வன. செந்நிறக் கங்காரு உள்நாட்டுப் பகுதிகளில் வாழுகிறது. வேருெரு வகையான கங்காருகள் பாறைகளை அடுத்த இடங்களிலும் ஆற்றுப் படுகைகளிலும் வாழ்கின்றன. மற்ருெரு வகையான கங்காருகளுள் ஒவ்வொன்றும் ஒரு சிறிய குதிரையின் எடை உள்ளவை. அது வாலின் நுனியில் ஆணி போன்ற கொம்பு வளர்ச்சி உடையது. அது பார்க்க அழகானது. இப் பலவகைக் கங்காருகளும் உயிர்க்காட்சி நிலையத்தில் விடப்பட்டுள்ளன.

# 11. சிறப்பு நகரங்கள்

ஆஸ்திரேலியாவின் வரலாறு, அரசியல், போக்குவரவு, தொழில், வாணிகம் முதலிய பல செய்திகளை நாம் அறிந்தோம். அதன் சிறப்பையும் நாகரிகத்தையும் எடுத்துக் காட்டுவன நகரங்களே ஆகும். நகர வாழ்வே ஆஸ்திரேலியாவில் பெரிதும் விரும்பப்படுகிறது. ஆகையால் நகரங்களில் மிகப் பெரிய மக்கள் தொகையும் தொழில் வளர்ச்சியும் காணப்படுகின்றன. அத்தகைய நகரங்களுள் சிட்னி, மெல்பர்ன், அடிலெய்ட், பெர்த், பிரிஸ்பேன், டவுன்ஸ்வில்லி, டார்வின், கான்பரா என்பன குறிப்பிடத் தக்கவையாகும்.

**சிட்னி**

ஆஸ்திரேலியாவின் பழைய நகரங்களுள் சிட்னி சிறப்பு மிக்கது. இது இன்று புதிய தென் வேல்ஸின் தலைநகரமாகத் திகழ்கின்றது. கி. பி. 1788-இல் பிலிப் என்னும் கவர்னர் தமது இருப்பிடமான பாடனி வளைகுடாவிலிருந்து இப் பகுதிக்குக் குடியேற முயன்றார். அவருக்குப் பின்னர் கவர்னர் மக்வாரி என்பவரே சிட்னியில் பிரிட்டிஷ் ஆட்சிக்கு அடிகோலினார்.

சிட்னி நகரில் ஏறக்குறையப் பன்னிரண்டு லட்சம் மக்கள் வாழ்கின்றனர். நகரத்தின் வட பகுதியில் மக்கள் வாழிடங்களும் தென் பகுதியில் தொழிற்சாலைகளும் அமைந்திருக்கின்றன. உடல்

நலத்திற்கு மிகவும் பொருந்துகின்ற தட்பவெப்பம் உடையது சிட்னி. குளிர் காலத்தில் மேல் காற்று மென்மையாக வீசிக் களிப்பு ஊட்டுகின்றது. கோடைக் காலத்தில் சிற்சில நாட்களைத் தவிர பல நாட்களில் வெப்பம் மிகுந்திருப்பதில்லை. ஆண்டு முழுமையும் இங்கு மழை பெய்து இனிமை தருகிறது.

சிட்னியில் கண்ணைக் கவரும் கட்டடங்கள் அழகுடன் விளங்குகின்றன. இரண்டு பெரிய மாதா கோவில்களும், பல்கலைக் கழகக் கட்டடமும், அஞ்சல் நிலையமும், அரசாங்க அலுவலகங்களும் காட்சிக்கு மிக இனியன. சிட்னியில் மிக்க அகல மான நீண்ட தெருக்களைக் கண்ட போது நான் பெரிதும் வியப்பு அடைந்தேன். இங்குள்ள சட்ட சபை மன்றம் வரலாற்றுப் புகழுடையது. நகரத் தில் ஆங்காங்கே பூங்காக்கள், புதியவராக வந்து பார்க்கும் வெளிநாட்டார் உள்ளங் கவரும் வகை யில் மலர்ச்சியுடன் வரவேற்கின்றன. ஹைட் பூங்கா வும், பயிர் நூல் ஆராய்ச்சித் தோட்டமும், கிரிக் கெட் விளையாட்டு வெளியும், அரசாங்க உழவுப் பண்ணை நிலமும் சிட்னி நகருக்குக் குன்றுப் புக ழைத் தருகின்றன. சிட்னியின் துறைமுகம் உவகை பூத்த சோலையாகக் காட்சியளிக்கிறது. அங்குக் கட லில் நீராடி மகிழ ஆஸ்திரேலியர் கூட்டங் கூட்ட மாக நாள்தோறும் வருகின்றனர். அங்குள்ள உல் லாசப் படகுகளில் வானொலிப் பெட்டி இன்னிசை பாடுகின்றது. துறைமுகத்திற்கும் நகரத்திற்கும் இடையே பல மின்சாரத் தொடர் வண்டிகளும்

புகை வண்டிகளும் எப்போதும் ஓடிக்கொண்டிருக்கின்றன. எஃகால் செய்யப்பட்ட வளைந்த பெரிய பாலம் துறைமுகத்தில் உயர்ந்தோங்கித் தோன்றுகிறது. அத்தகைய பாலங்கள் உலகில் ட கச் சில வாகும்.

சிட்னி, தொழிற்சாலைகளால் சிறப்புற்ற பெரு நகரமாகும். அங்கு ஏறக்குறைய 6200 தொழிற்சாலைகள் உள்ளன. துணிநெசவு, உலோகத் தொழில், இயந்திரத்தொழில், புகைவண்டிப் பொறிகள் செய்யும் தொழில் முதலிய பல தொழில்கள் சிறப்புற்று விளங்குகின்றன. உலகப் புகழ்பெற்ற கம்பள ஏற்றுமதித்தொழில் சிட்னியில் தான் மிகுதியாக நடைபெறுகிறது.

**மெல்பர்ன்**

சிட்னி நகருக்கு அடுத்த பெருமையுடையது மெல்பர்ன் நகரமே. இது விக்டோரியா மாநிலத்தின் தலைநகரமாக விளங்குகின்றது. விக்டோரியா அரசியாரின் அமைச்சரான மெல்பர்ன் பிரபுவின் பெயரால் இந்நகரம் அழைக்கப்படுகின்றது. கி.பி. 1835-இல் டாஸ்மேனியாவிலிருந்து புறப்பட்ட இரண்டு கப்பற்குழுவினர் மெல்பர்ன் நகரை வந்தடைந்தனர். இந்நகரம் யாரா ஆற்றங் கரையில் அழகுற அமைந்துள்ளது. இங்கு 'உப்பு நீர், வெரீபீ' என்னும் பெயருடைய நீரோடைகள் எழில் வாய்ந்தவை. இதன் மக்கள் தொகை பதின் மூன்று லட்சமாகும்.

# மாகாணங்களும்
# சிறப்பு நகரங்களும்



கி. பி. 1854-இல் முதன் முதலில் ஆஸ்திரேலியாவில் இரயில் பாதை மெல்பர்ன் நகரத்திற்கும், இதன் துறைமுகத்திற்கும் ஏற்பட்டது. அருகிலுள்ள பொன் சுரங்கங்களுக்கும், பண்ணைகளுக்கும், தொழிற்சாலைகளுக்கும் இரயில் இங்கிருந்து எப்போதும் ஓடிக்கொண்டிருக்கிறது. இந்நகரின் தட்பவெப்பம் உடலுக்குப் பொருந்துவதாகும். இங்கு மின்சார வசதியும் நீர்வசதியும் எளிதில் கிடைக்கின்றன.

மெல்பர்ன் இயற்கை எழிலும், செயற்கை நலமும் ஒருங்கேவாய்ந்த நகரமாகும். இங்குள்ள பயிர்நூல் ஆராய்ச்சித் தோட்டங்கள் மிகச் சிறப்பானவை. ஏறக்குறைய ஆறுயிரம் ஏக்கர் நிலங்கள் பூங்காவின் அமைப்புக்காகச் செம்மை செய்யப்பட்டுள்ளன. இந்நகரை அடுத்த குன்றுகள் இன்பச் செலவுக்கு மிகவும் பொருந்தியவை. நான் இங்குள்ள சட்ட சபை மன்றம், தொழிற் காட்சிக் கூடம் முதலிய இடங்களுக்குச் சென்றிருந்தேன். அவை ஆஸ்திரேலியரின் நாகரிக வளர்ச்சிக்குச் சிறந்த சான்றுகள் என்பதில் ஐயமில்லை. மெல்பர்னிலிருந்து கோதுமை, பாற்பண்ணைப் பொருள்கள், பழங்கள் முதலியன வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றன. ஆஸ்திரேலியாவின் நூற்றுக்கு முப்பத்தைந்து பங்குள்ள கம்பளம், மெல்பர்னிலிருந்து ஏற்றுமதியாகின்றது.

**அடிலெய்ட்**

தென் ஆஸ்திரேலியாவின் தலைநகரம் அடிலெய்ட் என்பது. இதனை கி. பி. 1836-இல் சார்லஸ் ஸ்டர்ட் (Charles Sturt) என்பவரும், வில்லியம் லைட் (William Light) என்பவரும் கண்டுபிடித்தனர். இந்நகர் செயின்ட் வின்செண்ட் விரிகுடாவின் கிழக்குப் பகுதியில் அமைந்திருக்கிறது. இதற்குத் தெற்கே எழில்வாய்ந்த குன்றுகள் தோற்றமளிக்கின்றன; இதற்கு வடக்கே தாழ்ந்த நிலப் பகுதிகள் உள்ளன. இது கடல் போக்கு வரவுக்கும், நிலப் போக்கு வரவுக்கும் பெரிதும் வாய்ப்புள்ள துறைமுகமாகத் திகழ்கின்றது.

அடிலெய்ட் நகரம் சதுரமான அமைப்புக் கொண்டது. தோட்டங்களும், பூங்காக்களும், காடுகளும் இந்நகரின் ஒவ்வோர் எல்லையிலும் காட்சியளிக்கின்றன. இங்குள்ள டாரன்ஸ் (Torrens) என்னும் ஆற்றில் அணைகட்டியுள்ளனர். இதனால் பெரிய நீர்த்தேக்கம் பரந்த ஏரிபோலக் காட்சியளிக்கிறது. இங்குக் கம்பளத் தொழிற்சாலையும், மண்பாண்டத் தொழிற்சாலையும் மிகுந்துள்ளன. அடிலெய்ட் துறைமுகத்தின் ஏற்றுமதிப் பொருள்களின் மதிப்பு, ஆஸ்திரேலியாவின் முழு ஏற்றுமதியில் நான்கில் ஒரு பங்காகும். இங்குள்ள சுரங்கத் தொழிற் பள்ளி, மாதா கோவில்கள், போர்க்கால நினைவுச் சின்னங்கள், புகழ்பெற்ற பெரியார்களின் உருவச்சிலைகள் என்பன கண்டு மகிழத்தக்கன. **கர்னல் லைட் என்பவர் உருவச்சிலையை அட்டை படத்திற் கண்டு மகிழ்க.**



ஜார்ஜ் அரசர் சதுக்கம், பிரிஸ்பேன்

### பெர்த்

பெர்த் நகரம் மேற்கு ஆஸ்திரேலியாவின் தலை நகரமாகும். இது ஆஸ்திரேலியாவின் தென் மேற்கே சுவான் என்னும் ஆற்றங்கரையில் அமைந் துள்ளது. இது கி. பி. 1856-இல் உருப்பெற்றது. இங்கே 'பெர்த் வாட்டர்' என்னும் அழகிய ஏரி இயற்கையாக அமைந்திருக்கிறது.

பெர்த் நகரத் தெருக்கள் மிகக் குறுகியவை. இது பழைய நகரமாதலின் குறுகிய தெருக்கள் இன்றும் அழிவுறாமல் இருக்கின்றன. நான் இங்குள்ள மாளிகைகளுள் ஒன்றான ஸெயின்ட் ஜார்ஜ் மாளிகைக்குச் சென்றேன்; அங்குள்ள சிற்ப வேலைத் திறனைக் கண்டு மகிழ்ந்தேன். ஏறக் குறைய ஆறாயிரம் ஏக்கர் பரப்புள்ள பூங்காக் களுள் அரசப் பூங்காவே (King's Park) மிகப் பெரியது. இதன் பரப்பு 1018 ஏக்கர் ஆகும். இது சுவான் ஆற்றங்கரையை ஒட்டி அமைந்துள்ளது. இப்பூங்காவில் நான் அமர்ந்திருந்தபோது பூமணங் கமழ்ந்த இனிய காற்றை உட்கொண்டேன்; பொழுது போவதே தெரியாமல் பல மணி நேரம் அங்கேயே இருந்தேன். இரயில் பாதைகள் மிகுந் துள்ள தொழிற்சாலை நகரமாக இன்று பெர்த் நகரம் விளங்குகின்றது.

### பிரிஸ்பேன்

குவீன்ஸ்லாந்து மாநிலத்தின் தலைநகரம் பிரிஸ்பேன் ஆகும். மோர்டன் வளைகுடாவில் பாய்கின்ற பிரிஸ்பேன் என்னும் ஆற்றங்கரையில்

இது அமைந்துள்ளது. பிரிஸ்பேன் ஆறு பள்ளமான நிலப் பகுதியில் ஓடுவதால் சிற்சில காலங்களில் வெள்ளப்பெருக்கு எடுத்துக் கரைகளை உடைக்கின்றது. ஒரு காலத்தில் இங்குக் கவர்னராயிருந்த சர் டி. எம். பிரிஸ்பேன் என்பவரின் பெயரால் இது அழைக்கப்படுகிறது. கி. பி. 1842-இல் பிரிஸ்பேன் ஒரு நகரமாகியது; பின்பு கி. பி. 1859-இல் குவீன்ஸ்லாந்தின் தலைநகரமாயிற்று.

இந்நகரில் மின்சார வசதியும், நீர் வளமும் மிகுதியாகக் கிடைக்கின்றன. இது சுகாதார முறையில் சிறந்து விளங்கும் நகரமாகும். இது உழவு, மேய்ச்சல், சுரங்கத் தொழில்களுக்குப் பெயர் பெற்றது. இங்கு ஏறத்தாழ 680 தொழிற்சாலைகள் உண்டு. உணவுப் பொருள்கள் உற்பத்தியும் துணி உற்பத்தியும் இங்கு மிகுதியாக நடைபெறுகின்றன. மேலும் மோட்டார் செய்யும் தொழில் இந்நகரத்தின் சிறப்புத் தொழிலாகும். இதன் இரயில் பாதை வடக்கே சர்க்கரைத் தொழில் நிறைந்த துறைமுகங்களோடும், தெற்கே சிட்னியோடும் இணைந்துள்ளது. இதனால் இங்குத் தொழில் வளம் பெருகியிருப்பது குறிப்பிடத்தக்கது. இங்கிருந்து கம்பளம், இறைச்சி, மாட்டுப் பண்ணைப் பொருள்கள், சர்க்கரை முதலியவை ஏற்றுமதியாகின்றன. பொதுவாகக் குவீன்ஸ்லாந்து மாநிலம் தொழில் வளத்தில் பிற்போக்கானது என்றே கூறலாம். ஆனால் அதன் தலைநகரான பிரிஸ்பேன் பிற நகரங்களுடன் போட்டியிடும் அளவுக்குச் சிறந்து விளங்குகின்றது.

## டவுன்ஸ் வில்லி

டவுன்ஸ் வில்லி என்னும் நகரம் குவீன்ஸ் லாந்திலுள்ள இரண்டாம் சிறப்பு நகரமாகும். குவீன்ஸ்லாந்தின் வடபகுதிக்கு டவுன்ஸ் வில்லியே தலைநகரமெனக் கூறத் தகும் என்று ஆஸ்திரேலியர் கருதுகின்றனர். இந்நகரிலுள்ள ரோஸ்கிரீக் ஆற்றில் ஆழங்குறைவாக இருப்பதால் இப்போது பல இயந்திர உதவியால் இதை ஆழமாக்கி வருகின்றனர். டவுன்ஸ் வில்லியின் இரயில்பாதை அருகிலுள்ள பொன், செம்பு முதலிய சுரங்கங்களோடு இணைந்துள்ளது. இதனால் இங்குப் பல தொழிற்சாலைகள் நிறுவப்படுகின்றன.

## டார்வின்

ஆஸ்திரேலியாவின் வடக்கு மாநிலத்தின் தலை நகரம் டார்வின் எனப்படும். டார்வினுக்கும் சிட்னிக்கும் இடையே அறுநூறு மைல் நீளமுள்ள இரயில்பாதை செல்லுகின்றது. கி. பி. 1369-இல் டார்வின் நகரம் ஏற்பட்டது என்று அந்நகர அதிகாரிகள் என்னிடம் கூறினர். இங்கு இப்போது ஆறுயிரம் மக்கள் வாழ்கின்றனர். டார்வினில் தனியான சட்டசபை மன்றம் இல்லை. ஏனென்றால் இந் நகரம் உட்பட்ட வடக்கு மாநிலம் ஆஸ்திரேலிய இணைப்பு அரசாங்கத்தின் நேர்ப் பார்வையில் ஆளப்படுகிறது. இங்குப் பெரும்பாலும் பிரிட்டிஷ் மக்களே வாழ்கின்றனர்.

**கான்பரா**

ஆஸ்திரேலியாவின் தலைநகரம் கான்பரா என்பது. ஒரு காலத்தில் புதிய தென் வேல்ஸ், விக்டோரியா ஆகிய இருமாநிலத்தாரும் தத்தம் நகரங்களே ஆஸ்திரேலியாவின் தலைநகரமாக வேண்டுமென்று விரும்பினர். ஆனால் இருவர்க்கும் பொதுவாகக் கான்பரா தலைநகரமாக்கப்பட்டது. கான்பராவின் வானவூர்தி நிலையம் மிகக் குறுகியதே. இங்குச் சிறப்புக்குரிய தொழில் துறைகள் இல்லை. அரசியல் தலைநகரமாகவே இது சிறப்புப் பெறுகின்றது. இந்நகரம் நடு அரசாங்கத்தாரால் நேரடியாக ஆளப்படுகின்றது. நடு அரசாங்கப் பாராளுமன்றமும், வெளிநாட்டுத்தூதர் செயலகமும், உயிர்நீத்த வீரர்க்குரிய நினைவு மண்டபமும் இங்கு காணத்தக்கவை. இப்போது பதினேழாயிரம் மக்கள் இங்கு வாழ்கின்றனர். காலப்போக்கில் கான்பரா பெரிய நகரமாகும் எனவும், அதற்காக இப்பொழுதே பாதைகளும், குடிதண்ணீர், மின்சாரம் முதலிய வசதிகளும் ஏற்படுகின்றன எனவும், இங்குள்ள அதிகாரிகள் என்னிடம் கூறினர்.

# 12. சில விவரங்கள்

## ஆஸ்திரேலிய வெள்ளையர்

ஆஸ்திரேலிய வெள்ளையர் யாவரும் பிரிட்டனிலிருந்து வந்தவரே யாவர். ஆதலால் அந்நாட்டில் ஆங்கிலமே அரசாங்க மொழியாக இருந்து வருகின்றது. இவருள் மூன்றில் இருபங்கினர் சிட்னி, மெல்பர்ன், பிரிஸ்பேன், அடிலெய்ட், பெர்த், ஹோபர்ட் முதலிய பெரிய நகரங்களிலேயே வாழ்கின்றனர். ஆஸ்திரேலியர் இயற்கைக் காட்சிகளைக் கண்டு இன்புறுவதில் மிக்க விருப்பமுடையவர்; அமைதி பெறவும் ஓய்வு பெறவும் சிலர் தோப்புக்களுக்கும், அடர்ந்த புல்வெளிக்கும் செல்வதுண்டு. இவர்கள் தோட்டத்தோடு கூடிய சிறிய வீடுகளில் தனித்தனியே வாழுதலை விரும்புகின்றனர்; தம் வீட்டுச் சுவர்மீது பழுப்பு நிறத்தையும், சாக்லேட் நிறத்தையும் பூசுவதில் விருப்பங் கொண்டவர். இம்மக்கள் எப்பொழுதும் மேனாட்டு ஐரோப்பிய உடையிலேயே காணப்படுவர். ஆடவருள் சிறந்த உடை உடுப்பவர் தொழிலாளரே யாவர். திங்கள்தோறும் அவர்கள் பெறும் முதல் வார வருவாய் உடைகளுக்கே செலவழிக்கப்படுகின்றது. பொதுவாக, ஆடவரைவிடப் பெண்டிரே சிறந்த உடையணிகின்றனர்.

**உணவு**

ஆஸ்திரேலிய வெள்ளையர் விருந்துகளில் பற்றுடையவர். பழங்களிலும், பலவகை ரொட்டிகளிலும், பிற உணவுப் பொருள்களிலும் தேனைச் சேர்ப்பதில் விருப்பங் கொண்டவர். **தேன் சேகரிக்குந்** தொழிலை இவர்கள் திறம்பெற நடத்துகின்றனர்; ஆண்டுதோறும் பல்லாயிரம் டன் எடையுள்ள தேனை வெளிநாடுகட்கு அனுப்புகின்றனர். செம்மறியாட்டு இறைச்சியே இவர்களுக்குச் சிறப்பு உணவாகும்.

**நுண்கலைகள்**

இசை, நடனம், ஓவியம் முதலிய நுண்கலைகள் ஆஸ்திரேலியாவில் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ச்சி பெற்று வருகின்றன. ஆஸ்திரேலியர் நகைச்சுவைப் படங்கள் வரைவதில் பெயர் பெற்றவர். நகைச்சுவைப் படங்கள் வரைவதில் உலகப் புகழ்பெற்ற டேவிட் லோ, கார்டன் கர்ரி, வில்டைசன் என்பவர் ஆஸ்திரேலியரே யாவர். ஆஸ்திரேலியர் நாடகப் பிரியர். ஆஸ்திரேலியாவில் நாடக அரங்குகள் மிகுதியாக இருக்கின்றன. நாடகக்கலை அங்குப் புதிதாக ஏற்பட்டு, வளர்பிறைபோல வளர்ந்து வருகின்றது. ஒரு கோடி ரூபாய் மதிப்புள்ள நாடக அரங்குகள் சிட்னியிலும் மெல்பர்னிலும் இருக்கின்றன எனின், ஆஸ்திரேலியரது நாடகக் கலைப்பற்றை என்னென்பது?

அந்நாட்டில் நடனக்கலை ஊக்கத்துடன் வளர்க்கப்படுகிறது. ஆஸ்திரேலிய நடனமகளிர் பல்வேறு நாட்டு நடன வகைகளிலும் பண்பட்டிருக்கின்றனர். மெல்பர்ன் நகர அரங்கம் ஒன்றில் நமது மலையாள நாட்டுக் கதகளி நடனத்தை ஓர் ஆஸ்திரேலிய இளநங்கை ஆடியதைக் கண்டு நான் பெருவியப்படைந்தேன்.

**படக்காட்சி**

படக்காட்சி அங்குக் குழந்தைப் பருவத்தில் இருக்கின்றது. ஓராண்டில் மூன்று படங்களுக்கு மேல் பெரும்பாலும் எடுக்கப்படுவதில்லை.

**விளையாட்டுக்கள்**

ஆஸ்திரேலியர் **கிரிக்கெட்** விளையாட்டில் இணையற்றவர். இதனை இவர்கள் தமக்குரிய சிறப்பு விளையாட்டாகக் கொண்டிருக்கின்றனர். ஆஸ்திரேலியச் செய்தித் தாள்களில் இவ்விளையாட்டைப் பற்றிய கட்டுரைகளும் செய்திகளும் அடிக்கடி வெளிவந்து கொண்டிருக்கும். இவ் விளையாட்டுக்கென ஒவ்வொரு மாநிலத் தலை நகரத்திலும் விளையாடுமிடங்கள் கண்ணைக்கவரும் முறையில் அமைந்துள்ளன.

**குதிரைப் பந்தயத்திலும்** ஆஸ்திரேலியா பெயர் பெற்றது. குதிரைமீது ஏறி ஓட்டும் பயிற்சியை அளிக்கும் பள்ளிகள் பல அங்கு இருக்கின்றன. மெல்பர்ன் நகரத்திலுள்ள குதிரைப் பந்தய வெளி

பார்க்கத்தக்கது. டென்னிஸ், ஹாக்கி விளையாட்டுக்களிலும் ஆஸ்திரேலியர் ஊக்கம் மிக்கவரே; **நீச்சுப் போட்டியிலும்** சிறந்த முறையில் பயிற்சி பெற்றுள்ளனர். ஆஸ்திரேலிய மக்களுள் பலர் பொழுது போக்குக்காக மீன் பிடிப்பர். ஆற்றில் மீன்பிடிக்க எவ்விதக் கட்டுப்பாடும் அந் நாட்டில் இல்லை. படகோட்டும் விளையாட்டிலும் அவர்கள் தக்க பயிற்சி பெற்றுள்ளனர். கல்லூரி மாணவரும், அலுவலக வேலையாட்களும், தொழி லாளரும் படகோட்டும் விளையாட்டில் பெரும் பங்கு கொள்கின்றனர்.

**அரசாங்க அலுவலர்**

நாட்டு ஆட்சி நன்முறையில் நடக்கவேண்டு மாயின் அமைச்சன் முதல் சேவகன் வரையுள்ள அரசாங்க அலுவலர் அனைவரும் கடமையுணர்ச்சி யுடன் செயலாற்றுதல் வேண்டும். இக்கடமை யுணர்ச்சியில் சிறிது வழுவின் ஆட்சியில் குறை பாடு தோன்றும். இதனை நன்குணர்ந்தவர் ஆஸ்தி ரேலியர். பொது இடங்களில் அமைச்சரும், அர சாங்கச் சேவகரும் ஒப்பாகவே கருதப்படுகின் றனர். அமைச்சர்கள் பொதுமக்களோடு வரிசை யாக நின்றே விளையாட்டிடங்களிலும், பிற பொது இடங்களிலும் நுழைவுச் சீட்டுப் பெறுவர்.

**பெண்கள்**

ஆஸ்திரேலியப் பெண்கள் அந்நாட்டு ஆட வரைப் போலவே எல்லாத் தொழில்களிலும் ஈடு

படுகின்றனர். அரசாங்கம் அவர்களுக்குச் சிறப்பாக ஆதரவு காட்டுகின்றது. அதனுல் தொழிற்சாலைகளில் பெண்கள் தொகை மிகுதியாக இருக்கின்றது. குடும்பப் பெண்கள் தம் குழந்தைகளுக்கு வேண்டும் உடைகளைத் தாங்களே தைக்கின்றனர்; பின்னல் வேலையையும் செய்கின்றனர்; தங்கள் குடும்பத்திற்கு வேண்டும் உணவுப் பொருள்களைத் தயாரிக்கின்றனர். அனுதைக் குழந்தைகளையும், துடுக்குத்தனம் மிகுந்த பிள்ளைகளையும் வளர்க்கும் பொறுப்பை ஆஸ்திரேலிய அரசாங்கம் ஏற்றுக்கொண்டுள்ளது. இப்பிள்ளைகளை வளர்க்க நூற்றுக்கணக்கான செவிலித் தாய்மார்கள் அரசாங்கத்தினரால் அமர்த்தப் பட்டுள்ளனர். தொடக்கநிலைப் பள்ளிகளில் பிள்ளைகளைக் கவனிக்கும் தாதிமார் பலர் பணி செய்கின்றனர்.

பெண்கள் பலவகை விளையாட்டுக்களிலும், நீச்சுப் போட்டிகளிலும், இசை நடனம் நாடகம் என்னும் கலைகளின் வளர்ச்சியிலும் பெருவிருப்புடன் ஈடுபடுகின்றனர். அவர்கள் ஒரு நிமிட நேரத்தையும் வீணுகக் கழிப்பதில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

**செய்தித் தாள்கள்**

ஏறத்தாழ எண்பது லட்சம் மக்கள் வாழும் ஆஸ்திரேலியாவில் முப்பது நாளிதழ்கள் இருந்து வருகின்றன. இவையன்றி வார இதழ்களும், திங்கள் இதழ்களும் நூற்றுக்கு மேற்பட்டுள்ளன. நாளிதழ்களில் ஒவ்வொரு நாட்டு அரசியற்செய்தி

க்ளும், பல தொழிற் செய்திகளும், பிறவும் வெளி யாகின்றன. நாளிதழ்களுள் 'சிட்னி மார்னிங் ஹெராால்டு', 'மெல்பர்ன் ஆர்க்ஸ்' என்பன சிறப் பிடம் பெற்றுள்ளன. வார இதழ்களுள் 'ஆஸ்திர லேசியன் போஸ்ட்' என்பது குறிப்பிடத்தக்கது. திங்களிதழ்களுள் 'வாக் எபவுட்' (Walk About), 'தி ஆஸ்திரேலியன் அவுட்லுக்' என்பன குறிக் கத்தக்கவை. இவற்றுள் பல நாடுகளைப் பற்றிய கட்டுரைகளும், சுவை பயக்குஞ் செய்திகளும் திங்கள் தோறும் வெளியாகின்றன.

**வானொலி**

ஆஸ்திரேலியாவில் அரசாங்கம் முப்பது வானொலி நிலையங்களை நடத்தி வருகின்றது. தனிப்பட்ட வணிகர் நூற்றுக்கு மேற்பட்ட வானொலி நிலையங்களை நடத்துகின்றனர். அயல் நாடுகளுக்கு ஒலி பரப்புதல், அரசாங்கத்தார் கடமையாகும். பலவகைச் செய்திகள், அரசாங்க அறிக்கைகள் முதலியவற்றை ஆங்கிலத்திலும், வெளிநாடுகளுக்குரிய நிகழ்ச்சிகளைப் பல மொழி களிலும் இவை ஒலி பரப்புகின்றன. வணிகர் நடத்துபவை உள்நாட்டுக்கே ஒலி பரப்புவது; விளம்பரங்களை ஒலி பரப்புதல் இவற்றின் சிறப்பு வேலையாகும்.

பாராளு மன்றம் நியமிக்கும் ஒரு குழுவினர் இவ்விரு நிலையங்களும் ஒலிபரப்ப வேண்டுவன வற்றை முடிவு செய்கின்றனர். இக்குழுவினர் இசைவின்றி எந்த வானொலி நிலையமும் செய்தியை

ஒலிபரப்புதல் முடியாது. ஆஸ்திரேலியப் பாராளு மன்றத்தின் நிகழ்ச்சிகள் மிகச் சிறந்த முறையில் பொதுமக்களுக்கு அரசியல் அறிவு ஏற்படும் வகையில் ஒலிபரப்பப் படுகின்றன.

தேர்தலில் நிற்பவர் வீடுவீடாகச் சென்றோ, நமது நாட்டில் நடப்பதுபோல் தெருக்களில் கூட்டம் நடத்தியோ தம் கட்சிக் கொள்கைகளைப் பிரசாரம் செய்வதில்லை; தேர்தலில் நிற்கும் ஒவ்வொரு கட்சியினரும் நாள்தோறும் குறிப்பிட்ட நேரத்தில், அரசாங்க வானொலி நிலையங்களின் வாயிலாகவே பிரசாரம் செய்கின்றனர். இதனால் தேர்தல் பிரசாரச் செலவு ஏற்படுவதில்லை. வறுமையின் பிறப்பிடமாகவுள்ள நமது நாட்டில் இச்சீரிய முறையைக் கையாள்வது ஏற்றதன்றோ? ஆஸ்திரேலியாவில் கட்டாய வாக்குப் பதிவு உண்டு. ஒவ்வொரு குடிமகனும் தன் வாக்கைப் பதிவு செய்யவேண்டும் என்பது சட்டம்; தவறினால் இரண்டு பவுன் தண்டம் கட்டுதல் வேண்டும். இந்நிலை ஏற்பட்டுள்ளதால் ஒவ்வொருவரும் அரசியல் கட்சிகளைப் பற்றிய அறிவையும், தேர்தலுக்கு நிற்பவர் தகுதிகளையும் ஆராய வசதி ஏற்பட்டுள்ளது.

## அமைதியான வாழ்க்கை

இன்றைய ஆஸ்திரேலியாவில் வாழும் சுமார் எண்பது லட்சம் மக்களுள் ஏறத்தாழ 77 லட்சம் பேர் வெள்ளையராவர்; சீனர் பதினையாயிரவர்

இருக்கின்றனர்; எஞ்சியோர் பல நாட்டவர். இவர் அனைவரும் இங்கு ஒற்றுமையாகவே வாழ் கின்றனர். அரசாங்கம் அனைவரையும் ஒரே முறையில் நடத்தி வருகின்றது. பல நாட்டு மாண வர்களும் இங்குக் கல்வி கற்கின்றனர். இத்தகைய நல்ல உறவு உள்ளமையால், எல்லோரும் அந் நாட்டு முன்னேற்றத்திற்கு உழைத்து வரு கின்றனர்.